# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
9.12.2007 ரூ.8.00
80 பக்கங்கள்



2 ரூபாய் அரிசி...
மின்சார அதிர்ச்சி !

# அரசியலில் குதிக்கும் அமைச்சரின் அக்கா!

Team Health Shoppe
For Wellness

ALOE VERA

# அரிது, அரிது ஆலோவேரா அரிது !

## இயற்கை முறையினாலான ஆலோவேரா பொருட்கள்

பாரம்பரியமான அழகு சாதன மற்றும் உணவு பொருட்களை வழங்குகிறோம்.
வாருங்கள், வாழ்க்கைக்கு மேலும் மெருகேற்றுங்கள்.






இப்பொழுது ஜி. என். செட்டி சாலை, தி.நகரில்



Also Available : • Flax Seed Powder • Flax Seed Oil • Organic Products • Olive Oil



**TEAM EUBIO CARE** (Division of CAL)

**வண்டலூர்:** டீம் ஹவுஸ், (Opp. Vandalur Zoo) ஜி.எஸ்.டி. ரோடு, போன்: 2275 0502

**அண்ணாநகர்:** பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, (லேபர் ஆபிஸர்ஸ் குவார்ட்டர்ஸ் அருகில்) Ph : 4269 3332

**இந்திரா நகர்:** 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், Ph : 4269 5115

**புரசைவாக்கம்:** எண்.23B, பேஸ்மெண்ட், பிரின்ஸ் டவர்ஸ் (அபிராமி மெகாமால் எதிரில்) புரசைவாக்கம் ஹை ரோடு, Ph : 4542 8898

**தி.நகர் :** பு.எண்: 2, ப.எண்: 60, லலிதாகிருஷ்ணா அபார்ட்மெண்ட், கிரி ரோடு, (பாரதிராஜா மருத்துவமனை பின்புறம், ஜி.என்.செட்டிரோடு அருகில்). Ph : 4269 4849

For bulk requirements : Team House - GST Road, (Opp. Vandalur Zoo), Vandalur, Ch - 48. Fax : 22750860.

E-mail: teamhealthshoppe@drraoholdings.com | www.teamhealthshoppe.com




தலைவர்கள் பாதுகாப்புக்குத் துப்பாக்கி தரலாமா?
8





56 ரோபோ செய்யும் ஹார்ட் ஆபரேஷன்!

பிரபஞ்சன் சிறுகதை
58





வேல்
- விமர்சனம்
72

# பேப்பரும் வேண்டாம்; புத்தகமும் வேண்டாம்!

கர்நாடக சங்கீதக் கச்சேரிகளில், பேப்பரைப் பார்த்தும் புத்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டும் பாடுகிற பழக்கம் இன்றைக்குப் பல முன்னணிக் கலைஞர்களாலும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. 'கீர்த்தனைகளைப் பொருளுணர்ந்து, நன்றாக உள்வாங்கிக்கொண்டு பாட வேண்டாமா?' என்று கேள்வி எழுப்பினால், ''பேப்பரைப் பார்த்தபடியே பொருளுணர்ந்து பாவத்துடன் பாட முடியும்'' என்று சர்ச்சைக்குரிய பதில் வருகிறது. ''பார்க்காமல் பாட முயற்சி செய்து, தப்புத் தப்பாகப் பாடுவதைக் காட்டிலும் இது தேவலாம்'' என்கிற சமாதானமும் சொல்லப்படுகிறது.

வாதங்கள் சரியாக இருப்பதாலேயே அவை நியாயங்கள் ஆகிவிடுவதில்லை! சாஹித்தியத்தின் (பாடலுடைய வார்த்தைகளின்) முக்கியத்துவத்தை முதன்மையாகக் கருதி மதித்தனர் முதுபெரும் கலைஞர்கள். ஆர்.கே. வேங்கடராம சாஸ்திரியின் வாழ்க்கை இதை உணர்த்துகிறது.

கர்நாடகாவில் காவேரிக் கரையில் உள்ள ருத்ரபட்டணம் என்கிற ஊரைச் சேர்ந்தவர் சாஸ்திரி. பாரம்பரியம் மிக்க இசைக் குடும்பத்தில் 1907ல் பிறந்தார். திருவையாறு தியாகராஜ ஆராதனையை நாற்பதாண்டுகள் இடைவிடாது முதல் கர்த்தாவாக நின்று நிகழ்த்தும் பேறு பெற்றார். அதே குடும்பத்து வழித் தோன்றல்கள்தான் இன்றைய முன்னணிக் கலைஞர்களான ஆர்.கே.ஸ்ரீகண்டன், ஆர்.கே.ரமாகாந்த், ருத்ரபட்டணம் சகோதரர்கள், வயலின் ஆர்.கே.ஸ்ரீராம்குமார்



★ எம்.எஸ். கச்சேரியில் சாஸ்திரி வயலின்

ஆகியோர்.

வேங்கடராம சாஸ்திரி முதலில் மைசூர் சௌடய்யாவிடமும் பின்னர் பாப்பா வேங் கடராமைய்யாவிடமும் பயின்றார்.

ஒரு வயலின் கலைஞருக்கு கச்சேரியில் என்ன வேலை...? பிரதான கலைஞரைப் பின்பற்றியே வாசிக்க வேண்டும். 'ஒரே ஒரு இழை பின்னால் இருந்தபடி குரலையோ வாத்தியத்தையோ தொடர் வதற்கு, நாம் ஏன் விழுந்து விழுந்து கீர்த்தனை களைப் பாடம் பண்ணவேண்டும்?' என்று சாஸ்திரி நினைக்கவில்லை. வேத சாஸ்திரங்களில் ஞானமும் பற்றும் கொண்டிருந்த அவர், பக்தி திளைப்பில் ஸ்புரித்த மகான்களின் கீர்த்தனைகளைத் தெய்வீகப் படைப்புகளாகவே அணுகிக் கற்றார். அவற்றின் அழகியலை விரல்களிலும் பொரு ளாழத்தை இதயத்திலும் தத்துவ மேன்மையைச் சிந்தையிலும் தேக்கிக்கொண்டதால், அவருடைய வயலின் வாசிப்பு அலாதியான துல்லியமும், எளிமையின் அழகும் நிரம்பியதாக மிளிர்ந்தது. ஒரு தனி பாணி உருவாயிற்று. அவரது காலத்து மூத்த வித்வான்கள் சாஸ்திரியைப் பக்கவாத்தியமாகப் போட்டுக்கொள்ள, பெரிதும் விரும்பினார்கள். எம்.எஸ்.ஸுக்கு ஆர்.கே.வேங்கடராம சாஸ்திரி வாசித்தபோது, வயலின் பக்கவாத்திய வாசிப்புக்கு ஒரு புது இலக்கணமே உருவாயிற்று.

அந்த இலக்கணத்தை மட்டுமின்றி கர்நாடக சங்கீதத்தில் ஆழங்கால்பட்டு, தாம் உணர்ந்த அழகையும் பொருளையும்கூட, தமது நேரடி சிஷ்யர் களுக்கு வழங்கினார் சாஸ்திரி. அகில இந்திய வானொலியில் பணியாற்றிக்கொண்டே வகுப்பு களும் எடுத்தார். அவர் பாணிக்கு வாரிசுகளாக, இன்று அவரது பேரன் ஆர்.கே.ஸ்ரீராம்குமாரும் முல்லைவாசல் சந்திரமௌலியும் தொடர்கிறார்கள்.

தாத்தாவின் நூற்றாண்டு விழாவைக் குடும்பமே கொண்டாடி மகிழ்ந்துள்ள சமயத்தில், பேரன் ஸ்ரீராம்குமாரின் பக்கவாத்திய வாசிப்புக்கு 'டிமாண்ட்' உச்சத்தில் இருக்கிறது! தாத்தாவைப் போலவே அழகும் பொருளும் பொதிந்து, இடைஞ் சல் செய்யாமல் அவர் வாசிக்கிறார். போனஸாக, பாடகர் மறந்துபோகும் எந்த வார்த்தையையும் எடுத்துக்கொடுக்கும் அளவுக்கு சாஹித்ய ஞானம் உள்ளவர். ஆர்.கே.ஸ்ரீராம்குமார் பக்கத்தில் இருந் தால் பேப்பரும் வேண்டாம்; புத்தகமும் வேண் டாம்!




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.


இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# அரசியலில் குதிக்கும்

தி.மு.க.காரர்களுக்கு எப்போதுமே ஒரு வருத்தம் உண்டு. தேர்தலில் தாய்மார்களின் ஆதரவு அவர்களுக்குக் கணிசமாக இல்லாதிருப்பதும், அவர்களின் பொதுக் கூட்டம், மாநாடுகளுக்குப் பெண்கள் திரளாக வராததும், அவர்களை அடிக்கடி கவலைக்குள்ளாக்கும். வாக்குப் பதிவு நாளன்று 'தாய்மார்கள் திரண்டு வந்து வோட்டுப் போட்டார்கள்' என்று செய்தி வந்தால் உடன்பிறப்புகளுக்குக் கலக்கம் வந்துவிடும். குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால், எம்.ஜி.ஆர். தனிக் கட்சி கண்ட பிறகு கலக்கமும் வருத்தமும் அவர்களுக்கு இன்னமும் அதிகமாயின. தி.மு.க.விலும் சத்தியவாணி முத்துவுக்குப் பிறகு பெயர் சொல்லும்படியான ஒரு முன்னணித் தலைவர் வரமுடியவில்லை. அண்ணா காலத்தில் பூங்கோதை - அருள்மொழி என்கிற இரு பெண்கள் தமிழகமெங்கும் தி.மு.க. மேடைகளில் சொற்சிலம்பம் ஆடி கட்சியை வளர்த்தார்கள். அலமேலு அப்பாத்துரை, சற்குண பாண்டியன், சுப்புலட்சுமி ஜெகதீசன் (அ.தி.மு.க.விலிருந்து வந்தவர்) ஆகியோர் தி.மு.க.வில் குறிப்பிடத்தக்க பெண் பிரமுகர்கள். பல்வேறு கட்டங்களில், பெண்களுக்கு ஆதரவாகப் பல சட்டங்களை கருணாநிதி கொண்டு வந்தாலும் தாய்மார்களிடம் ஆதரவு பெருகவில்லை. இந்நிலையில்தான் அரசியலில் நேரடியாகக் குதித்தார் கனிமொழி. அவர் கட்சியில் சேர்ந்த பிறகு நடந்த மகளிர் இட ஒதுக்கீடு பேரணியில் கணிசமாகவே பெண்கள் திரண்டு வந்திருந்தனர். இப்போது கனிமொழிக்குத் தோள் கொடுக்கும் தோழியாக அரசியல் களத்தில் குதித்திருக்கிறார் கவிஞர் தமிழச்சி. சேர்ந்தவுடனேயே, நெல்லை இளைஞரணி மாநாட்டில் கொடியேற்றும் வாய்ப்பு தமிழச்சிக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. எதிர்கால அரசியலில் அவருக்கு என்ன காத்திருக்கிறது என்பதைவிட, அவரது அரசியல் எதிர்காலம் என்பது தி.மு.க. அதிகார மையங்களின் செல்வாக்கைப் பொறுத்தே அமையவிருக்கிறது. ஆனால், படித்த, நல்ல பொறுப்பில் இருந்த தமிழச்சி, அரசியலில் குதித்ததை கவிஞர்கள், படைப்பாளிகள் இருகரம் தட்டி வரவேற்கிறார்கள்.



* தமிழச்சி

''நமது அரசியலில் எழுத்தாளர்கள், கவிஞர்கள் ஆகியோர் நிறைய வர வேண்டும். அதுவும் கல்வியைப் பின்புலமாகக் கொண்டவர்கள் வந்தால், மக்கள் பிரச்னைகளைச் சுலபமாகப் புரிந்துகொள்வதுடன் தீர்வும் காண முடியும். காலப்போக்கில் பெரிய மாற்றம் வரும். பல நாடுகளில் படைப்பாளிகள் பாராளுமன்ற உறுப்பினர்களாகவும், தலைவர்களாகவும் உருவாகியிருக்கிறார்கள். அந்த வகையில் தமிழச்சியின் அரசியல் பிரவேசம் வரவேற்கப்பட வேண்டியதே'' என்கிறார் எழுத்தாளர் மனுஷ்யபுத்திரன்.

தி.மு.க. நிர்வாகத்தில் பெண்களுக்கு முக்கிய பொறுப்புகள் கொடுக்க வேண்டுமென்று முனைந்து, இப்போது துணைப் பொதுச் செயலாளர் பொறுப்பில் இருக்கிறார் சற்குண

# அமைச்சரின் அக்கா!



✱ சல்மா



✱ இளம்பிறை



✱ மனுஷ்யபுத்திரன்

பாண்டியன். மாவட்ட அளவிலும் பல பெண்கள் பொறுப்பில் இருக்கிறார்கள். எதிர்காலத்தில் ஸ்டாலின் முன்னணிக்கு வரும்போது, கனிமொழிக்குத் துணைப் பொதுச் செயலாளர் அந்தஸ்து கிடைக்கும் வாய்ப்பும் இருக்கிறது. இந்த வகையில் ஏற்றத்தைக் கணிக்கும்போது தமிழச்சிக்கும் நல்வாய்ப்பு வரும் என்று எதிர்பார்க்கலாம்.

''தலைவர் கலைஞர் அவர்கள் கடந்த ஒரு மாத காலமாகவே முரசொலியில் இளைய தலைமுறையினர் அரசியலுக்கு வரவேண்டும் என்று எழுதிக் கொண்டிருக்கிறார். பல தலைவர்கள், புரட்சியாளர்கள் செய்த தியாகங்களை எடுத்து வைத்து, அவர்களை இளைய தலைமுறை வழிகாட்டிகளாக ஏற்றுச் செயல்பட வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறார். அந்த எழுச்சியூட்டும் கடிதங்கள் தமிழச்சியை உடனடியாக அரசியலில் குதிக்கத் தூண்டியிருக்கலாம். அவரைப் போன்ற அறிவுஜீவிகள், படைப்பாளிகள் அரசியலுக்கு வந்துகொண்டே இருக்க வேண்டும்'' என்கிறார் கவிஞர் சல்மா.

எந்தவிதப் பின்புலமும் இல்லாத

## 'சுயமரியாதை சுமதி'

மு.க.அழகிரி மதுரைக்குப் போய் செட்டிலான 1980களின் இறுதியில், உள்ளூர் தி.மு.க. தலைவர்கள் 'எதிர்காலத்தில் இவர் எப்படி வருவாரோ?' என்று தெரியாமல் அவரைவிட்டுக் கொஞ்சம் தூரம் மரியாதையுடன் தள்ளி நின்றனர். அந்தச் சமயத்தில் அழகிரியிடம் பாசம் காட்டிப் பழகிய சிலரில், சுமதி என்கிற தமிழச்சியின் தந்தை தங்கபாண்டியனும் ஒருவர். ராமநாதபுரம் (விருதுநகரம் உள்ளடக்கிய) மாவட்டத்தில் கழகத்தை வளர்த்ததில் சுயமரியாதைக்காரரான தங்கபாண்டியனுக்கு முக்கிய இடம் உண்டு. தங்கபாண்டியன் குடும்பத்துக்கும், அழகிரி குடும்பத்துக்கும் இடையே உண்டான பாசம் கலந்த நட்பு இன்றுவரை தொடர்கிறது. தங்கபாண்டியன் மறைவுக்குச் சில காலத்துக்குப் பின் தங்கம் தென்னரசுவை அரசியலில் கொண்டு வந்து அமைச்சராக அழகு பார்த்தார் அழகிரி. இன்று அவரது அக்கா தமிழச்சிக்கும் அரசியலில் ஒரு நல்ல தளத்தை உருவாக்கும் விதத்தில், பின்னணியாக இருக்கிறார்.

தி.மு.க. குடும்பப் பின்னணி, இலக்கிய ஆர்வம் போன்றவை இயல்பாகவே கனிமொழியிடம் தமிழச்சிக்கு நெருக்கத்தைக் கொண்டு வந்தது. இன்று தி.மு.க.வில்

தனிப்பட்ட பெண்கள், ஏன் ஆண்களேகூட அரசியலில் முன்னணிக்கு வர முடிவதில்லை. தி.மு.க. அமைச்சர்கள், முன்னணித் தலைவர்கள் ஆகியோரின் மகன், மகள், பேரன், பேத்திகள் ஆகியோர்தான் இளைய தலை முறை பிரமுகர்களாகவும், மாவட்டச் செயலாளர்களாகவும் வலம் வருகிறார்கள். சின்ன வயதிலிருந்தே அரசியல் சூழலில் வளரும் குழந்தைகளுக்குப் பெரியவர்களானவுடன் அரசியலில் நுழைவது எளிதாக இருக்கிறது.

**அரசியல் முகம் வன்முறையாகத் தோற்றமளிக்கும் இன்றைய காலகட்டத்தில் தைரியமாகக் களம் இறங்கியுள்ள தமிழச்சி பாராட்டுக்குரியவர்.**

"தமிழச்சி போன்று அரசியல் குடும்பத்திலிருந்து வருபவர்களுக்கு வேறுவிதமான போராட்டங்கள் இருந்திருக்கும். தமிழச்சி அறிவுசார்ந்த துறையிலிருந்து அரசியலுக்கு வருகிறார்.

இது மிக நல்ல விஷயம். இவரைப் போல் நிறைய பேர் வரணும். அரசியல் கட்சிகளும், பெண்களுக்குப் பொறுப்புகளில் ஐம்பது சதவிகிதம் தரவேண்டும்" என்கிறார் கவிஞர் இளம்பிறை.

"அரசியல் பின்னணி, ஒருவர் முன்னுக்குவர உதவியாக இருக்கும் என்பதை ஒப்புக்கொள்ளும் அதே சமயத்தில், ஒருவர் தமது சொந்தத் தகுதிகளை வளர்த்துக் கொள்ளாவிட்டால், நிலைத்து நிற்க முடியாது என்பதையும் உணர வேண்டும். தங்கம் தென்னரசு தான் அமைச்சர் பொறுப்புக்குத் தகுதியானவர் என்று இப்போது நிரூபித்து விட்டார். அதேபோல, தமிழச்சிக்கும் செயல்படும் வகையில், முடிவுகள் எடுக்கும் பொறுப்புக் கொடுத்தால் அசத்துவார்" என்கிறார் விடுதலைச் சிறுத்தைகள் கட்சியின் சட்டமன்ற உறுப்பினர் ரவிக்குமார்.

"அரசியல் முகம் வன்முறைமயமாகத் தோற்றமளிக்கும் இன்றைய காலகட்டத்தில் தைரியமாகக் களம் இறங்கியுள்ள தமிழச்சி பாராட்டுக்குரியவர். தி.மு.க. போன்ற பெரிய இயக்கங்கள் நிர்வாகப் பொறுப்பு மற்றும் கொடியேற்றும் கௌரவத்தைப் பெண்களுக்குக் கொடுப்பது மற்ற இயக்கங்களுக்கும் நல்ல வழிகாட்டுதல்" என்றும் சொல்கிறார் அவர்.

தமிழச்சி பேராசிரியர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு அரசியலில் இருக்கும் இரு அதிகார மையங்களுக்கிடையே, தமிழச்சி பாலமாக இருக்கிறார் என்று சொன்னால், அது மிகைப்படுத்தல் இல்லை. 'வனப்பேச்சி' மற்றும் 'எஞ்சோட்டுப் பெண்' என்கிற இவரது கவிதைத் தொகுப்புகள் வந்திருக்கின்றன. இவருக்கு மேடை நாடகங்களில் மிகுந்த ஆர்வம் உண்டு. பிரசன்னா ராமசாமியின் பல நவீன நாடகங்களில் நடித்திருக்கிறார் தமிழச்சி.

புலம்பெயர்ந்த தமிழர்களின் படைப்புகள் பற்றி டாக்டர் பட்டத்துக்கான ஆராய்ச்சி மேற்கொண்டுள்ளார். இரண்டு பெண் குழந்தைகள். கணவர் சந்திரசேகர், காவல் துறையின் நுண்ணறிவுத் துறையில் பணியாற்றும் அதிகாரி.



* தங்கம் தென்னரசு

ஜெ. அரசு ராணிமேரிக் கல்லூரி இடத்தைத் தலைமைச் செயலகத்துக்காக எடுக்க முயன்றபோது நடந்த போராட்டத்தில் இவர் கலந்து கொண்டபின், 'சிவகங்கைக்கு மாற்றிவிடுவோம்' என்று பயமுறுத்திப் பார்த்தார்களாம். 2006-ல் ஆட்சி மாற்றத்துக்கு முன்னர் அரசு குடியிருப்பைக் காலி செய்ய அழுத்தம் கொடுத்திருக்கிறார்கள். "நான் திடீரென்று அரசியலில் குதிக்கவில்லை. ஏற்கெனவே இடஒதுக்கீடு தொடர்பான மகளிர் பேரணி மற்றும் சேது சமுத்திரம் பிரச்னையில் உண்ணாவிரதம் ஆகியவற்றில் கலந்துகொண்டிருக்கிறேன். அரசியல் என் இரத்தத்திலேயே

# JAI TOURS

எண்.5, முதல் மெயின் ரோடு, அரும்பாக்கம், சென்னை-106.
Ph: 044 - 24756202, 6534 0725, 93805 37352

**அன்புடன் வரவேற்கிறோம்!**

நீங்கள் சுற்றுலா பிரியரா? செல்லுமிடத்தில் சரியான வாகனம் கிடைக்குமா? நல்ல உணவு கிடைக்குமா? தங்குமிடம் சரியாய் அமையுமா? என்கிற 'கவலைகளை' மறந்து சுற்றுலாவை முழுமையாக அனுபவிக்க வேண்டுமென எண்ணுபவர்களா?

கவலையை எங்களிடம் கொடுங்கள் சுற்றுலாவை சுகமாக அனுபவியுங்கள்! இந்தியாவின் எந்த மூலைக்குச் செல்வதாக இருந்தாலும் வாகனம், தங்குமிடம், உணவு ஆகியவற்றுக்கு நாங்கள் பொறுப்பு.

தேனிலவு தம்பதினருக்கு தனிச் சுற்றுலாவும் உண்டு.

மாணவர்களுக்கு தனிச் சுற்றுலா மற்றும் பேருந்து ஏற்பாடுகள் செய்து தரப்படும்!

**ஒரு நாள் சுற்றுலா**

| | | |
|---|---|---|
| பிரதி செவ்வாய் | Rs. 375/- | தன்வந்தரி, ரத்தனகிரி, திருவலம், செம்பாக்கம், திருமலைக்கொடி (தங்கக் கோயில்) |
| Dec - 13 | Rs. 350/- | சோளிங்கர், கோவிந்தவாடி, கூரம் |
| Dec - 20 | Rs. 390/- | வைகுண்ட ஏகாதேசி : ஆப்பூர் பெருமாள், திரு முக்கூடல், திருமலைவையாவூர், பொன் விளைந்த களத்தூர் பெருமாள் |

முதல் மற்றும் மூன்றாவது சனிக்கிழமைகளில் திருப்பதி திருமலா தரிசனம் Rs. 850/-
திருச்சானூர், சீனிவாச மங்காபுரம், திருமலை, (Inclusive of Transport, Lunch, Dharshan & + 2Laddu)

**தினசரி திருப்பதி திருமலா தரிசனத்திற்கு தகுந்த ஏற்பாடுகள் செய்து தரப்படும்**


குதித்தது, வேறுவிதமான கவலையை ராணிமேரி கல்லூரி ஆங்கிலத் துறை பேராசிரியர்களுக்கு உண்டாக்கியிருக்கிறது.

''எங்கள் துறையில் 32 பேர் இருந்தோம். இப்போது பதினான்கு பேர்தான் இருக்கிறோம். மற்றபடி சுமதி ஒரு நல்ல கவிஞர்; பழகுவதற்கு இனியவர். கடந்த இரண்டு வருடங்களாகப் பாடம் எடுப்பதை நிறுத்திவிட்டு ஆராய்ச்சி படிப்பை மேற்கொண்டிருக்கிறார். நல்ல வாய்ப்பு வரும்போது அரசியலில் ஈடுபடு வேன் என்று சொல்லி வந்தார். அவருக்குப் பிரகாசமான எதிர்காலம் அமைய வாழ்த்துகள் என்கிறார்கள்'' பேராசிரியர்களான மாலதியும், மாலினியும்.

**- ப்ரியன்**

ஊறியதுதானே'' என்று நெருக்கமானவர்களிடம் சொல்லியிருக்கிறார் தமிழச்சி.

எதிர்கால தி.மு.க. அரசியலில் யார் யாருக்கு எந்தெந்த பாத்திரங்கள் என்று சதுரங்கத்தில் காய்களை நகர்த்துவது போல் கழகத்தில் இப்போது நடந்துகொண்டிருக்கிறது. அந்த வகையில் சதுரங்கக் கட்டத்தில் ஒருவராக இணைந்துவிட்டார் தமிழச்சி. இதுபோன்ற புதியவர்களின் வரவு கட்சியின் களப்பணியாளர்களிடையே அதிருப்தி, பிரிவினை போன்றவற்றைத் தோற்றுவிக்க வாய்ப்புகள் அதிகம். அவற்றை எதிர்கொண்டு அனைவரையும் அரவணைப்பதுடன், இந்தப் படித்த புதுவரவுகள் லஞ்ச - ஊழலற்ற சூழலுக்கான அஸ்திவாரத்தை ஏற்படுத்தினால்தான் தமிழகம் வாழ்த்தும்.

**- தில்லப்பா**



● வெ.ராம்குமார், வேலூர்

? 'காங்கிரஸ் கட்சியைப் பலம் வாய்ந்த இயக்கமாக மாற்ற என்னிடமோ, ராகுல் காந்தியிடமோ மந்திரக்கோல் எதுவுமில்லை' என சோனியா காந்தி பேசியது எதைக் காட்டுகிறது?

! கட்சிக்குள் சர்வாதிகாரம் என்ற கொடுங்கோலை விட்டுக்கொடுக்க மனமில்லாதவர் பேசும் பேச்சு இது. உட்கட்சி ஜனநாயகம் என்ற மந்திரக்கோலைப் பயன்படுத்தினால், அது செங்கோலாக இயங்கி காங்கிரஸை ஒரு குறைந்தபட்ச காலகட்டத்துக்குள் நிர்சயமாகப் பலப்படுத்தும்.



✱ அன்பற்ற ஆணை!

● உமரி பொ.கணேசன், மும்பை - 37

? ரீமிக்ஸ் என்ற பெயரில் பாடல்களின் தரத்தைக் கெடுக்கிறார்களே?

! சில சமயங்களில் வரிகளும் அருவருப்பாக, கலாசாரத்தைக் குழிதோண்டிப் புதைப்பனவாக இருக்கின்றன. 'பொல்லாதவன்' படத்தில் வரும் ஒரு ரீமிக்ஸ் சாங்கில் யோகி பாடுவதாக வரும் 'செக்ஸ் இல்லா காதல் தப்பு' நல்ல படத்தின் கரும்புள்ளி. வெற்றி மாறன் கவனமாக இருக்க வேண்டும்.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? பிரச்னைகள் பல இருந்தபோதிலும், சிரித்துக் கொண்டே ஆட்சியைத் தொடர்கிறாரே பிரதமர்?



✱ சுதந்திரச் சிரிப்பு!

! பெயருக்கேற்ற குணம் உடையவர். எனவே, அவரால் சுதந்திரமாகச் சிரிக்கவாவது முடிகிறதே என்று நாம் மனம் மகிழ்கிறோம்.

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? தமிழகம் முழுவதும் பல இடங்களில் அ.தி.மு.க. சார்பில் ஆர்ப்பாட்டங்கள் நடைபெறுகின்றன. ஆனால், ஒன்றில்கூட அக்கட்சித் தலைவர் ஜெயலலிதா முன்னின்று களப்பணி செய்வதில்லையே, ஏன்?

! அவர் பிறந்து, வளர்ந்து, வாழ்கின்ற சூழ்நிலை அப்படிப்பட்டது. உண்ணாவிரதத்தின்போதுகூடத் திண்டுமெத்தையும் ஏர்கூலரும் தேவைப்படுகிறவருக்கு, வீதியில் இறங்கிப் போராடுவது எப்படி முடியும்? இதை ஒரு குறை என்று கருத முடியாது. அவருடைய ஆளுமை எப்படிச் செயல்படுகிறது என்பதே முக்கியம்.

● ஏ.எஸ்.யோகானந்தம், ஔவையார் பாளையம்

? தமது படம் ஓடுவதற்காக விளம்பரம் தேடித்தான் கிரிக்கெட் பார்க்க வருகிறார் என்று விமர்சனம் செய்ததால், இனிமேல் வாழ்நாளில் கிரிக்கெட்



# தலைவர்கள் பாதுகாப்புக்குத் துப்பாக்கி தரலாமா?

***போட்டிகளை நேரில் பார்க்க வரமாட்டேன்' என்று ஷாருக்கான் வருத்தப்பட்டிருப்பது பற்றி...?***

! 'இனிமேல்தான் நான் விளம்பரம் தேடிப் பிரபலமடைய வேண்டும் என்கிற அவசியம் இல்லை' என்று ஷாருக்கானே கூறியிருக்கிறார். எனவே, அவரைப் பற்றிய விமர்சனம் அபத்தமெனில் ஷாருக்கின் சபதம் ஓவர் ரியாக்ஷன். 'ஓம் சாந்தி ஓம்!' என்று இருக்க வேண்டியதுதானே!

● **உமாதேவி பலராமன், திருவண்ணாமலை**

***? கும்பகோணத்தில் சங்கராச்சார்யார் கலந்துகொண்ட யாகத்தில் ஆடுகள் பலி யிடப்பட்டன என்ற செய்தி குறித்து?***

! இது உண்மையெனில் வேதனைக்கும் அருவருப்புக்கும் கண்டனத்துக்கும் உரியது. மறுப்பு வராவிடில் நமக்கு அவரிடம் மதிப்புக் குறையும்.

● **எஸ்.சுவாமிநாதன், மன்னார்குடி**

***? தராசுக்கு அறிவுரை வழங்கப் பிடிக்குமா, கேட்கப் பிடிக்குமா?***

! அறிவுரை வழங்கும் அளவுக்குத் தான் உயர்ந்துவிட்டதாக 'தராசு' எப்போதும் எண்ணியதில்லை. பல்வேறு பிரச்னைகளில் எனது கருத்தை வெளியிடுகிறேன்; அவ்வளவே. அதேபோல், பிறர் கருத்தைக் கேட்கவும் படிக்கவும் எனக்குப் பிடிக்கும். ஏற்பதும் ஏற்காததும் அவரவர் சிந்தனையையொட்டி அமையும்; சிந்திப்பதே முக்கியம்.

● **என்.சுப்பிரமணியன், ரவணசமுத்திரம்** ★

***? கிராமப்புறங்களில் பணியாற்று வது, ஆயுள்வரை உண்ணாவிரதம் இருப் பதைக் காட்டிலும் கடினமானதா?***





★ கோணல்... ★ ... கோல்கள்!

! இல்லைதான்; ஆனால், எதையும் கட்டாயமாக்கும்போது சுதந்திர உணர்வுள்ள நாட்டில் எதிர்ப்பு எழவே செய்யும். அன்புமணியின் அணுகுமுறை அன்புடன் அமைந்திருக்குமேயானால், இந்தப் பிரச்னையே தலை தூக்கியிராது. இப்போது மாற்றுக் கட்சி அரசியல்வாதிகளுக்குப் பழிதீர்க்க வசதியாகிவிட்டது. மருத்துவப் படிப்பு ஓராண்டு நீட்டிக்கப்படுவதாகப் பொய்ப் பிரசாரமே நடக்கிறது. கட்டாயமாக்காமலே, ஓராண்டு கிராமப்புற சேவையைப் பெரும்பாலோர் ஏற்கச் செய்திருக்க முடியும்.

● **எஸ்.விஜயலட்சுமி, முந்தம்பட்டி** ❒

★ விபரீத யோசனை!

***? பெங்களூர் சட்டசபை உதறல்களில் மாநில அரசுக்கு - மத்திய அரசுக்கு நடந்த முக்கியமான பாடம் என்ன...?***

! 'கூடி வாழ்ந்தால்

கோடி நன்மை' என்பதை 'கோடி ரூபாய்' ஆதாயம் என்பதாக அர்த்தம் பண்ணிக் கொள்ளக் கூடாது. கோடி மக்களுக்கு நன்மை - இது மாநில அரசியலுக்குப் பாடம். உரலில் தலையைக் கொடுத்த பின் உலக்கைக்கு (ஜனாதிபதி ஆட்சி) பயப்படக் கூடாது. இது மத்திய அரசுக்குப் பாடம்.

● **டி.ஜெய்சிங், கோவை**

***? வைகோவைப் பாக்கெட்டில் வைத்துக்கொண்டே விடுதலைப் புலிகளை எவ்வாறு ஜெ. எதிர்ப்பார்?***

! அ.தி.மு.க.வின் கொள்கை வேறு; கூட்டணி தர்மம் என்பது வேறு என்று சொல்லிவிட்டார் - முடிந்தது பிரச்னை.

★ வளர்ந்த விதம்

● **சி.சுரேஷ், திருச்சிற்றம்பலம்**

***? இந்தியா - பாகிஸ்தான் ஒரு நாள் தொடர் எப்படி?***

! வெற்றியில் பெருந்தன்மையும் தோல்வியில் கண்ணியமும் காட்ட முடியும் என்பதை, முஷாரஃபுக்கு உணர்த்துவதுபோல் அமைந்திருந்தது.

● **வி.ஜி.சத்தியநாராயணன், சென்னை**

***? நல்லவர்களை அரசியலுக்கு வருக என தமிழக பா.ஜ.க. தலைவர் அழைக்கிறாரே! அரசியலில் நல்லவர்களை நல்லவர்களாக இருக்க விடுவார்களா?***

! முன்னேற விடாமல் தடுக்க முடியும்; நல்லவனாக இருப்பதை யாராலும் தடுக்கவே முடியாது.



★ ஷாந்தி கான்!

● **சிவ.இராமலிங்கம், ஆத்தூர்**

***? காமன்வெல்த் அமைப்பிலிருந்து பாகிஸ்தான் வெளியேற்றப்பட்டிருப்பது குறித்து?***

! முஷாரஃபின் சர்வாதிகாரப் போக்குக்கு, இதைவிடக் கடுமையான ஓர் எச்சரிக்கை இருக்க முடியாது. அதே சமயம் கமலேஷ் ஷர்மா தலைமைச் செயலர் பதவி பெற்றிருப்பது அவருக்கு மட்டுமின்றி இந்தியாவுக்கும் முதுகிலே ஷொட்டு!

● **த.சத்தியநாராயணன், அயன்புரம்**

***? தலைவர்களுக்குப் பாதுகாப்புக்குத் துப்பாக்கி வழங்கலாம் என்ற தா.பாண்டியனின் யோசனை...?***

! தா.பாண்டியனுக்குக் கூட இப்படி விபரீதமான யோசனை தோன்றியது ஆச்சர்யம். பகை வளர்க்காமல் இருப்பதே தலைவர்களுக்குச் சிறந்த பாதுகாப்பு.

● **ஜி.பாக்கியலட்சுமி, பாலக்காடு**

***? 'உலக அளவில் விலைகள் உயர்ந்ததால், அத்தியாவசியப் பொருள்களின் விலை உயர்வைத் தடுக்க முடியவில்லை' என்று பிரதமர் மன்மோகன் சிங் கூறியிருப்பது பற்றி..?***

! ஒரு பொருளாதார நிபுணர் இவ்வளவு அபத்தமாகப் பேசலாகாது. ஒரு நாட்டில் பணப் புழக்கத்துக்கு ஏற்ற உற்பத்திப் பெருக்கம் இல்லாததால்தான் விலைவாசி ஏறுகிறது. இது பொருளாதாரத்தின் அடிப்படை விதி. ஆனால், பிரதமரோ நாட்டின் பொருளாதார வளர்ச்சி விகிதம் மூன்றாண்டுகளாகத் தொடர்ந்து ஒன்பது சதவிகிதத்தில் இருப்பதாகப் பெருமையடித்துக்கொண்டு நிதியமைச்சரைப் பாராட்டியிருக்கிறார்! ஐ.டி. துறையின் வளர்ச்சி, வருமானம், உள்நாட்டு உற்பத்தியைப் பெருக்கவில்லை என்ற உண்மையை மறைத்து நம் காதிலே பூ சுற்றப் பார்க்கிறார்கள். ●

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**எஸ்.விஜயலட்சுமி,**
முத்தம்பட்டி

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**என்.சுப்பிரமணியன்,**
ரவணசமுத்திரம்

நெஞ்சில் திக்திக்குடன் படிக்கும்
நாம் கிளைமாக்ஸ் நெருங்க
நெருங்க நாற்காலி நுனிக்கு
வந்து விடுகிறோம்!
அங்கங்கே நகைச்சுவை....
அழகான காதல்... சுற்றுலா உணர்வு..
ஸைக்கோ ஸாரநாதன் சுவையான
புதினம் - சுபா, கல்கி




சோழமன்னர்களில் புகழ் பெற்ற
விஜயாலய சோழனை மையமாக
வைத்து கதை புனையப் பட்டுள்ளது.
விறுவிறுப்பும் வசீகரமும் கொண்ட
நடையில் எதிர் பாராத
திருப்பங்களுடன் அருமையாக
ரவிகுல திலகனைப் படைத்துள்ளார்
ராஜேந்திரன் - தினத்தந்தி



சாருலாதாவின் ஆழ்மன
உணர்வுகள் மிகச் சிறப்பாகப்
பதிவு செய்யப் பட்டுள்ளன.
கையில் எடுத்தால் படித்து
முடித்து விட்டுத்தான் வைக்க
வேண்டும் போல கதையோட்டம்.
மர்மத்துக்கும், திருப்பங்களுக்கும்
பஞ்சமில்லை - வையவன், கல்கி

# கல்கி ராஜேந்திரன் எழுதிய உள்ளத்தை உயர்த்தும் உன்னத நாவல்கள்!




❋ ரவி குல திலகன் ரூ. 125




❋ ஸைக்கோ ஸாரநாதன் ரூ. 130




❋ விண்ணும் மண்ணும் ரூ. 110




❋ சாருலதா ரூ. 120

## போனஸ்!

டிசம்பர் 15க்குள் எந்த மூன்று புத்தகங்களை
வாங்கினாலும் ஒரு புத்தகம் இலவசம்!

நான்கும் இந்தியாவுக்குள் எங்கள்
செலவில் கூரியரில் அனுப்பப்படும்.



**Vanathi Pathippakam**
பெயருக்கு
D.D., At Par cheque அல்லது M.O அனுப்பவும்.
**வானதி பதிப்பகம்,**
23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை -17.
☎ : 2434 2810, 2431 0769

# அஞ்சலி



* பால்யூ

# "அதுதான் பால்யூ!"

**அ**ண்மையில் காலமான மூத்த பத்திரிகையாளர் பால்யூ குறித்த தமது நினைவுகளை நம்மிடம் பகிர்ந்துகொள்கிறார், அவருடன் பல ஆண்டுகள் உடன் பணிபுரிந்தவரான எழுத்தாளர் பாமா கோபாலன் :

''நான் நல்ல நிருபராகப் பணிபுரிந்ததுக்கு பால்யூ மிக முக்கிய காரணம். பத்திரிகையையும் பத்திரிகையாளர்களையும் அவர் நோக்கும் கோணமே அலாதியானது. விசுவாசம் என்ற சொல்லுக்கு விசுவாசமானவர் அவர். எந்த ஒரு பேட்டிக்கு நான் போகும் முன்னாலும் நிறைய அறிவுரைகள் வழங்குவார். பத்திரிகையை உயிர் மூச்சாகக் கருத வேண்டும்; இளைய தலைமுறையையே எப்போதும் டார்கெட்டாகக் கருத வேண்டும்; குழப்பமில்லாத கேள்விகளுடன் எப்போதும் அணுக வேண்டும்; தெளிவான பதில்களை வரவழைக்கும் ஆற்றல் வேண்டும் வெறும் பேட்டி மட்டும் எடுத்துக்கொண்டு வந்துவிடாமல், பேட்டி தருபவரின் மேனரிஸம், அங்கு நிலவும் சூழல், குடும்ப விஷயங்கள் என்று எல்லாவற்றையும் கூர்ந்து கவனிக்க வேண்டும் என்றெல்லாம் கூறுவார். அவரின் யோசனைகள் பல சமயங்களில் எனக்குக் கைகொடுத்துள்ளன. சினிமா, அரசியல் பிரமுகர்களை பேட்டி எடுக்கும்போது கூடுதல் கவனத்துடன் இருக்கச் சொல்வார். அவர் கூறியதை மெய்ப்பிக்கும் விதமாக ஒரு சம்பவம் நடந்தது. கி.வீரமணியை ஒரு முறை நான் பேட்டி எடுத்த போது, எனக்கே தெரியாமல் அவரின் ஸ்டெனோகிராபரும் வீரமணி கூறியவற்றை என் பின் அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தார். பிறகு இதைக் கவனித்து பால்யூவிடம் நான் சொன்னபோது, 'நான் முன்பே சொன்னேனே...' என்று கூறி, விழிப்புடன் செயல்பட வேண்டிய அவசியத்தை இன்னும் வலியுறுத்தினார்.

குமுதத்தில் ஜேசுதாஸ் சிறப்பிதழ் செய்தபோது, ஜேசுதாஸ் ஆர்.எம்.வீ.யைப் பேட்டி எடுக்க வேண்டுமென்றார். பால்யூ வேறு வேலையில் ஈடுபட்டிருக்க, ஆர்.எம்.வீ.யைப் பேட்டி எடுக்க நான் பணிக்கப்பட்டேன். நான் சென்றதும் ஆர்.எம்.வீ. கேட்ட முதல் கேள்வி ''ஏன் பால்யூ வரவில்லை?'' அதுதான் பால்யூ!

– சுந்தரி



# ஜாதகமே தேவையில்லை நீங்களும் யோகசாலியாக வேண்டுமா?

## ஒயிட் & ஒயிட் VVMB

**நல்லப்பன் நீலகண்ட சிவா** சொன்னது நடந்தது. நடராஜர் பத்து என்னும் பாடலை பாடிய சித்தர்வழி பரம்பரை ஜோதிடர் முனீஸ்வரர் அருள்வாக்கு சித்தர்

**பிரதி மாதம் விஜயம்**

1ந் தேதி–செகுந்திராபாத் (ஓட்டல் இராமகிருஷ்ணா)

2,3,11,12,20,21,22,23,24ந் தேதி–பெங்களூர் (ஓட்டல் உட்லண்ட்ஸ் சிம்சன் சர்க்கிள் எதிரில்)

5ந் தேதி–திருச்சி (ஓட்டல் ரம்யாஸ்)

6ந் தேதி–சேலம்(ஓட்டல் நேஷனல்)

8ந் தேதி–மதுரை (ஓட்டல் சேந்தூர்)

13,14ந் தேதி–பாண்டிச்சேரி (ஓட்டல் ஜெயராம்)

25ந் தேதி–வேலூர் (வசந்தவிகார்)

28ந் தேதி–கோயம்புத்தூர் (ஓட்டல் தமிழ்நாடு)

சென்னையில் 4,7,9,10,15,16,17,18,19,26,27,29,30,31 ஆகிய தேதிகளில் நேரில் சந்திக்கலாம்

இவர் தன்னுடைய வருமானத்தை கோயில் திருப்பணிக்காகவும், நூற்றுக்கணக்கான கோயில் கும்பாபிஷேகத்திற்காகவும் செலவு செய்யும் பரம்பரை ஜோதிடர்

நெ.32, மகாலட்சுமி தெரு, திநகர், சென்னை–17.
போன் : 044–24761913 செல்: 98412 94932, 94444 16854

முனீஸ்வரர் அருளால் ஜாதகமே இல்லாமல் ஒருவருடைய முகத்தைப் பார்த்தும், கைரேகையைப் பார்த்தும், புகைப்படத்தை பார்த்தும், நடந்ததையும் நடக்கப் போவதையும், ஒளிவு மறைவு இல்லாமல் பளிச்சென்று பலன் சொல்லி அனைத்துப் பிரச்சினைகளையும், செய்வினை தோஷங்களையும், கிரக தோஷங்களையும் நிவர்த்தி செய்து அதிர்ஷ்டசாலி ஆக்குகிறார்.

**ராஜ் டி.வி.யில்** தினமும் காலை 6.50 மணிக்கு தோன்றுகிறார்



கைரேகை, எண்கணிதம், வாஸ்து சாஸ்திரம், முனீஸ்வரர் அருள்வாக்கு சித்தரின் வாரிசு

**நல்லப்பன் ராஜநந்திவர்ம சிவா, B.E., M.I.S.T.E., MBA., LLB.**

முனீஸ்வரர் அருள்வாக்கு வாஸ்துசித்தர் அவர்களை அணுகி வாஸ்து முறைப்படி வீட்டை அமைத்தும், தொழில் நிறுவனத்தை வாஸ்து முறைப்படி அமைத்தும், அஷ்ட ஐஸ்வர்யம் பெற்று வாழ அணுகவும்.

முகவரி: நெ.32, மகாலட்சுமி தெரு, திநகர், சென்னை–17.
போன் : 044–24761913 செல்: 98412 94932, 94444 16854
செல்: 9841594931, 9841294933, 9884476529

முனீஸ்வரர் அருள்வாக்கு சித்தரின் ஆசிபெற்ற: **விஜயஜீவி வீடியோ கவரேஜ்**
நெ.23, முதல் குறுக்குத் தெரு, அன்னைசத்யா நகர், பூந்தப்பேடு, இராமாபுரம், சென்னை–89.
போன்:044-24761913, செல்:9841594931, 98412 94933, 98844 76529

---

**தங்கள் முதியோர்களைப் பராமரிக்கப் பணம் கொடுத்தாலும் தகுந்த முதியோர் இல்லம் கிடைக்கவில்லையே என்று கவலைப்பட்டுக் கொண்டிருப்பவரா நீங்கள்?**

## JUST RELAX PLEASE!

**உங்களுடைய கவலையை சுகமாகப் பகிர்ந்து கொள்ள காத்திருக்கின்றது**

# SEA BRREEZE HOME FOR SENIOR CITIZENS

- அவரவர் விருப்பத்திற்குத் தகுந்தாற்போல் தனிநபர், தம்பதியர், பொது அறை வசதிகளும் உண்டு.
- நடமாட முடியாதவர்களையும் சேர்த்துப் பராமரிக்கின்றோம், தொலைக்காட்சி, பத்திரிக்கை, சுற்றுலா என பொழுதுப் போக்கு வசதிகளும் உண்டு.
- அவரவர் தகுதிக்குத் தகுந்தாற்போல் மாதக் கட்டணம், வருடக் கட்டணம், ஆயுள் கட்டண முறைகளில் சேர்த்துக் கொள்கின்றோம்.
- பசுமை, தூய்மையோடு 24 மணி நேர மருத்துவ சேவை, வாகன வசதி, பணியாளர் சேவையோடு காத்துக் கொண்டிருக்கிறோம்.
- சைவ உணவு

**மானுட சேவைக்குப் பேதமில்லை! மகிழ்வித்து மகிழ்வோம்!**

## ஸீ ப்ரீஸ் முதியோர் இல்லம்

## பாத்திமா டிரஸ்ட் (Regd)

24, M R G Nagar ஒக்கியம் பேட்டை, துரைப்பாக்கம், சென்னை – 600 096.
போன் : 2496 3949 செல் : 94440 21417. E-mail : fathimatrust@fathima syed.com

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G Income Tax Exemption) உண்டு.



# கல்கி



2007 டிசம்பர் 9
சர்வஜித் கார்த்திகை 23
மலர் : 66
இதழ் : 19

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

*- பாரதியார்*

## நீதித் துறையின் லட்சுமண ரேகை!

குருவாயூரப்பன் கோயிலுக்குச் செல்லும் பெண்கள் சுடிதார் அணிந்து செல்லலாமா என்கிற பிரச்னை உச்சநீதிமன்றம் வரை எடுத்துச் செல்லப்பட்டிருக்கிறது!

இதுபோன்ற விஷயங்களில் நீதி மன்றங்களின் நேரத்தை வீணடிப்பது தேச விரோதச் செயல். இப்படிப்பட்ட இலட்சக்கணக்கான தேவையற்ற வழக்குகளை நீதிமன்றங்கள் மேல்முறையீடுக்கு அனுமதி மறுத்து ஏன் தள்ளுபடி செய்யக்கூடாது?

தலைநகரில் சட்ட தினம் கொண்டாடியபோது உரையாற்றிய தலைமை நீதிபதி கே.ஜி.பாலகிருஷ்ணன், நீதி பரிபாலனத்தில் நிகழும் தாமதங்களுக்கு நீதித்துறை மட்டுமே காரணம் அல்ல என்றும் அத்துறையைப் பலப்படுத்த போதுமான அளவு நீதிபதிகள் நியமிக்கப் படவில்லை என்றும் இத்துறைக்கு அரசின் நிதி ஒதுக்கீடு மிகக் குறைவாகவே இருந்து வருகிறது என்றும் பேசியிருக்கிறார். வளங்கள் குறைவாக இருப்பதாலேயே அனாவசிய வழக்குகளைப் பதிவு செய்ய மறுப்பது மேலும் அத்தியாவசியமாகிறது என்பதை நீதித் துறை உணர வேண்டும். அனாவசிய வழக்குகளின் அபத்த இழுத்தடிப்பு காரணமாக, அவசியமான அவசர வழக்குகளும் தாமதப்படுகின்றன. இந்தக் குறைபாடை, நீதித் துறையின் உயர்மட்டப் பொறுப்பில் உள்ளவர்கள் மனம் வைத்தால் சீர் செய்யலாம்.

மாண்பமை நீதிபதி கே.ஜி.பாலகிருஷ்ணனே ஒரு சர்வதேச கருத்தரங்குக்காக டெல்லியில் பேசியபோது மற்றொரு விஷயத்தையும் அடிக்கோடிட்டுக் காட்டியிருக்கிறார்:

"ஒரு நீதிபதிக்கு வழங்கப்படும் சிறப்புரிமைகள் அவருடைய






சுதந்திர சிந்தனையைப் பாதுகாக்கவும் வழக்கு தொடரும் மனுதாரர்களின் நலனுக்காகவும் ஒட்டுமொத்த தேசத்தின் உயர்வுக்காகவும் பயன்படுத்தப்பட வேண்டும். நீதிபதி என்கிற தனி நபருக்குக் கூடுதல் அதிகாரங்கள் தருவதற்காக ஏற்பட்டவை அல்ல இந்தச் சிறப்புரிமைகள். ஆகவே, நீதித் துறையினரைக் கேள்விக்குட்படுத்துவதும் விளக்கம் கேட்பதும் தவறில்லை. அவ்வாறு விளக்கம் தரவேண்டிய அளவுக்கோ, சந்தேகத்துக்கு இடங்கொடுக்கும் விதத்திலோ நீதிபதிகள் நடந்துகொள்வது நல்லதல்ல. இந்த விஷயத்தில், நீதித்துறை சிறிது தவறினாலும் அரசியல் சக்திகள் உட்புகுந்து, நீதி பரிபாலனத்தில் தலையிட்டு நாசமாக்கிவிடும்.''

ஜஸ்டிஸ் கே.ஜி.பாலகிருஷ்ணனின் இந்த வார்த்தைகள் அக்ஷர லட்சம் பெறும் என்று சொல்வது மிகையாகாது. எனினும் இதை நடைமுறைப்படுத்துவதுதான் மிகப்பெரிய சவால்.

வழக்காடு நிபுணர்கள் மத்தியிலிருந்து தேர்வு செய்யப்படும் நீதிபதிகள், இலட்சிய நோக்கு உடையவர்களாக (பணத்துக்காக மட்டுமே வாதாடாமல், தர்ம நியாயத்துக்காக வாதாடக்கூடிய வக்கீல்கள்) இருப்பது அவசியம். எவ்வித பலவீனங்களும் அற்ற பண்பாளர்களாக இருப்பது முக்கியம். பதவியை தங்களுக்குச் செய்யப்பட்ட அலங்காரமாகக் கருதாமல் பவித்ரமான பொறுப்பாக - மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமையாகக் கருதுவது அத்தியாவசியம்.

இத்தகையவர்கள் மட்டுமே நீதிபதிகளாக நியமனமாகிற வகையில் லட்சுமண ரேகை வரைவது இத்துறையில் சாத்தியமே.

சட்ட தின கொண்டாட்டங்களின்போது பேசிய மத்திய சட்டத்துறை அமைச்சர் எச்.ஆர்.பரத்வாஜ், நீதிபதிகள் நியமன முறையைத் திருத்தவோ, மாற்றவோ அரசு விரும்பவில்லை என்றும் நீதிபதிகளே நீதிபதிகளை நியமிக்கிற இன்றைய நடைமுறையை பலப்படுத்த மட்டுமே விரும்புகிறது என்றும் கூறியிருக்கிறார். மாண்பமை நீதிபதி பாலகிருஷ்ணன், இந்த 'பலப் படுத்தும்' யோசனை நடைமுறைக்கு வரவேண்டியதை வலியுறுத்தி, விரைவுபடுத்த வேண்டும். லஞ்ச - ஊழலுக்கு இடம்தராத வகையில் நீதிபதிகளின் நியமனங்களும் நடத்தையும் அமைய, பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

குண்டர்கள் ராஜ்ஜியமாகி வரும் நம் நாட்டில் மிச்சமிருக்கும் ஒரே நம்பிக்கை நீதித்துறைதான். அந்த நம்பிக்கை வீண்போகாமல் காத்து, நீதித்துறையைப் பலப்படுத்துவது மாண்பமை நீதிபதி பாலகிருஷ்ணன் போன்றோரின் பொறுப்பு. ●



# "தவறான தமிழ் எம்.ஏ."

திகில் கலந்த அமானுஷ்ய படங்களை இயக்கிப் புகழ் பெற்றவர் 'யார்' கண்ணன். இப்போது மெகா டி.வி.க்காக 'ஜனனம்' என்கிற அமானுஷ்யத் தொடரை இயக்கி வருகிறார். அவரிடம் பேசினோம்.

''எனது சொந்த ஊர் பட்டுக்கோட்டை அருகிலுள்ள மதுக்கூர். என் அப்பா தியாகி கோவிந்தசாமி, கந்தசஷ்டி சொல்லி என்னை வளர்த்தவர். பக்தி இலக்கியங்கள் மீது ஈடுபாடு கொண்டவர். இலக்கியத்தைக் காதாலேயே கேட்டு வளர்ந்த சூழல்தான் பிற்காலத்தில் நான் இயக்குநராக உருவாக விதையாக அமைந்தது.

இயக்குநர் மகேந்திரனிடம் அசிஸ்டெண்டாகச் சேர்ந்ததோடு, 'ஏணிப்படிகள்', 'பகலில் ஓர் இரவு', 'காளி', 'ரிஷிமூலம்', 'ஹிட்லர் உமாநாத்' போன்ற படங்களுக்கு வசனகர்த்தாவாகவும் இருந்தேன். நான் இயக்கும் படங்களின் கரு, உலகளவில் உள்ள நம்பிக்கைகளை மையமாகக் கொண்டதாக இருக்க விரும்பினேன். அதனால்தான் திகில், அமானுஷ்ய சக்தி, மறுபிறவி போன்ற நம்பிக்கைகள் என் படங்களிலும் தொலைக்காட்சித் தொடர்களிலும் இடம்பெறுகின்றன.

தற்போது நான் இயக்கிவரும் ஜனனம் தொடர், தமிழ்நாட்டில் வாழ்ந்து சமாதியான 'கோரக்கர்' எனும் சித்தரைப் பற்றிய கதை. சித்தர்கள் அதிகமாக வாழும் கொல்லிமலைக்கு ஆன்மிகக் குழுவுடன் முப்பது முறை சென்றிருக்கிறேன். பல நாட்கள் அங்கே தங்கி சித்தர்களைப் பார்த்து, அவர்களின் செயல்களைக் கவனித்திருக்கிறேன். எனது வாழ்க்கையில் கிடைத்த இந்த அனுபவத்தை தமிழக மக்களும் உணர வேண்டும் என்ற எண்ணத்திலேயே 'ஜனனம்' தொடரை இயக்குகிறேன். கோரக்கராக நானே நடிக்கிறேன். முக்கியமான வேடத்தில் சீதா நடிக்கிறார்.

தொடர்களை இயக்கி வந்தாலும் சினிமா இயக்குவதிலும் எனது ஆர்வம் குறையவில்லை. வி.சி.குகநாதனின் தயாரிப்பில் 'திமிரியெழு' எனும் புரட்சிகர படத்தை இயக்க உள்ளேன்.

சமீபத்தில் வெளியான 'கற்றது தமிழ்' படத்தில், தமிழ் இலக்கியம் படித்ததாலேயே ஒருவன் பொருளாதார ரீதியில் கஷ்டப்படுவதாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. இது மிகவும் தவறான கருத்து. இன்றைக்கு நான் தமிழ் சினிமாவின் இயக்குநராக இருப்பதற்கும், பொருளாதார ரீதியில் மேம்பாடு அடைந்திருப்பதற்கும் நான் கற்ற தமிழ் எம்.ஏ.தான் காரணம்.

படிப்பது எது என்பது முக்கியமில்லை. நாம் தேர்ந்தெடுத்த துறையில் மற்றவர்களைவிட எவ்வாறு வேறுபட்டு இருக்கிறோம் என்பதுதான் முக்கியம்'' என்கிறார் 'யார்' கண்ணன்.

– ராகவ்குமார்



# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை

அன்புடன் அழைக்கிறது

## அமரர் கல்கி நினைவு நாள்







••

**'பாலாற்றில் ஒரு பகற்கனவு',**

**'கல்கி வளர்த்த கலைகள்'**

*- அமரர் கல்கி எழுதிய இரு நூல்கள் அறிமுகம்*

தலைமை வகித்து நூல்களை வெளியிடுபவர் : **திரு கிரேஸி மோகன்**

முதல் பிரதிகளைப் பெற்றுக்கொள்பவர் : **திரு விஜய் சிவா**

வாழ்த்துரை : **திருமதி காயத்ரி வேங்கடராகவன்**

••

தொகுப்பாசிரியர் **சுப்ர.பாலன்,**

பதிப்பாளர் **வானதி திருநாவுக்கரசு,**

ஓவியர் **ஹரிஷ் குகன்** ஆகியோரைச் சிறப்பித்தல்

••

**'சேது பந்தனம்'**

**- வேளுக்குடி திரு கிருஷ்ணன்** அவர்களின் சமயப் பேருரை

••

05.12.2007, புதன்கிழமை,

**மாலை 6:15 மணி**

**ஆஸ்திக சமாஜம் அரங்கம், வீனஸ் காலனி,**

**ஆழ்வார்பேட்டை,**

**சென்னை - 600 018**

**அனைவரும் வருக!**

# புதியன விரும்பு

சரித்திரப் பேராசிரியரான ஆச்சார்ய கிருபளானிக்குத் தீராத சந்தேகம். மனிதன் தோன்றிய ஆதிகாலத்தில், சிக்கிமுக்கிக் கல்லை வைத்துக்கொண்டு முதன்முதலில் நெருப்பை உண்டாக்கினான்; கல்லையே ஆயுதமாகப் பயன்படுத்தினான். அவன் பயன்படுத்திய ஆயுதங்களை வைத்துத் தான் கற்கால மனிதன், உலோக கால மனிதன் என்று காலம்கூடக் குறிப்பிடப் படுகிறது. மனித நாகரிக வளர்ச்சியே ஆயு தங்களின் வளர்ச்சியால் அளவிடப்பட்டு இருக்கிறது.

மேலும், சரித்திரம் முழுவதும் சண்டை தான். எல்லா காலகட்டத்திலும் போர் என்றாலே ஆயுதங்கள் - ஆயுத பலத்தால் வெற்றிகள். நிலைமை இப்படியிருக்க, நம் நாட்டில் மட்டும் காந்தியடிகள், கத்தி யின்றி இரத்தமின்றி யுத்தம் செய்வதாய்க் கற்பனை செய்துகொண்டு இருக்கிறாரே! இது எப்படிச் சாத்தியம்? அவரைச் சந்தித்து இந்தக் கேள்வியைக் கேட்டுவிட வேண்டும் என்ற உந்துதலில் சந்தர்ப் பம் எதிர்பார்த்துக்கொண்டு இருந்தார். சந்திக்கும் வேளை வந்ததும் மகாத் மாவைப் பார்த்து, 'சரித்திரம் முழுவதும் ஆயுதம் ஏந்தித்தான் சண்டை நடந்துள்ளது. ஆயுதம் இல்லாத சண்டை இதுவரை சரித்திரத்தில் பதிவானது இல்லை. நீங்கள் மட்டும் இப்படி ஒரு கற்பனையில் இருக்க லாமா?' என்று கேட்டார். அதற்கு மகாத்மா சிரித்தபடியே சொன்ன பதில்: "நான் சரித்திரம் படிக்க வரவில்லை; சரித்திரம் படைக்க வந்துள்ளேன்."

ஒரு பெரிய கூட்டத்தில் சுவாமி விவேகானந்தர் உரையாற்றிக் கொண்டி ருந்தார். கர்ம யோகத்தின் பெருமை பற்றிய உரை அது. கர்ம யோகம் என்றால், நம் உடல் உழைப்பின் மூலம் அடுத்தவருக்குச் செய்கின்ற உதவி என்றும்,

**புதுமையான சிந்தனைக்கு ஓர் உத்தியாகச் சொல்லப்படுவது என்னவெனில், சாத்தியமே இல்லாத ஒரு விஷயத்தை நடப்பதுபோலப் பேச வேண்டும்.**

பக்தி யோகம், ஞான யோகம், ராஜ யோகம் போலவே கர்ம யோகமும் கடவுளை அடையும் வழி என்றும், நான்கு யோகங் களில் ஏதாவது ஒன்றின் மூலமாகவோ அல்லது நான்கு வழிகளையும் சேர்ந்து அனுசரிப்பதன் மூலமாகவோ கடவுளை அடைய முடியும் என்றும் பேசினார். கூட் டத்தில் ஒருவர், "வேதங்களுக்கு இதுவரை விளக்கம் கொடுத்து வந்த முனிவர்களும் ஆச்சாரியர்களும் இப்படி ஒரு விளக்கம் சொன்னதில்லையே. கர்மயோகம் என்றால் கடவுளை நினைத்துச் செய்யப்படும் ஹோமங்களும், யாகங்களும் என்றுதான் கூறி இருக்கிறார்களே!" என்ற கேள்விக் குத்தான் மேற்கண்ட விடை அம்பு போல் பாய்ந்து வந்தது. 'இந்த விளக்கம்

# வையத் தலைமை கொள் 5



எனக்காகக் காத்திருந்தது.'

**க**விஞர்கள் என்றாலே அரசனைப் புகழ்ந்து பாடுவதும், பரிசில் பெறுவதும்தான் என்பது நாம் அறிந்ததே. எட்டையபுரம் மன்னனுடன் சமஸ்தானத்தில் அமர்ந்துகொண்டு, மன்னன் மகிழ்ச்சியுறும் சிருங்கார ரசம் ததும்பும் பாடல்களைப் பாடியும் விளக்கிக் கூறியும் பாரதி இருந்திருந்தால் வறுமை அவனை அண்டியிருக்காது. ஆனால், மகாகவிக்கு அவ்வாறு செய்ய மனம் ஒப்பவில்லை. பாட்டுத்திறத்தாலே வையத்தைப் பாலித்திட நினைத்து பட்டிதொட்டி எங்கும் பரவும் வண்ணம் தமிழை எளிமையாக்க நினைத்த பாரதி, ஒரு அரசவைக் கவிஞனாக எப்படி இருக்க முடியும்?

சடங்குகளிலும் மூட நம்பிக்கைகளிலும் சிக்கிக்கொண்டிருந்த இந்திய கலாசாரத்தை விடுதலை செய்து மீண்டும் உயிர்ப்பித்தார் சுவாமி விவேகானந்தர். அரசவை சமஸ்தானங்களில் அடங்கிக் கிடந்த தமிழ் மொழியை, பாமரனுக்கும் புரியும்வகையில் மாற்றியமைத்துக் கொடுத்தவர் மகாகவி பாரதி. 'தாழ்வுற்று வறுமை மிஞ்சி, பாழ்பட்டுக் கிடந்த பாரத தேசத்தை ஆயுதமில்லாப் புரட்சியால்

'சேவாலயா' முரளிதரன்

வாழ்விக்க வந்தவர் மகாத்மா காந்தி .

நீதி நெறி என்பது ஒரு தனிப் பாடமாக முன்பு பள்ளிகளில் இருந்தது. இன்று ஒரு சில பள்ளிகளில் இந்தப் பாடம் இருக்கலாம். சேவாலயா நடத்துகிற பள்ளியைப் பொறுத்த வரையில் காந்தி, பாரதி, விவேகானந்தர் வாழ்க்கை மற்றும் செய்தியே நீதி நெறிப் பாடமாக அமையவேண்டும் என்று முயற்சி செய்தோம். இந்தத் துறையில் நிபுணர்களான சில நண்பர்களின் துணையுடன், நாங்களே ஒரு பாடத் திட்டம் தயாரித்தோம். 'BGV' என்று நாங்கள் அழைக்கும் இந்தப் பாடத் திட்டம், முதல் வகுப்புகளிலிருந்து பன்னிரண்டாம் வகுப்பு வரை கட்டாயமாக்கப்பட்டுள்ளது. மேற்கண்ட மூன்று தலைவர்களின் வாழ்க்கையில் நடந்த பல நிகழ்ச்சிகளையும், அவர்களின் தத்துவங்களையும் விளக்குவதாக அமைந்துள்ளது.

சென்ற ஆண்டு TCS நிறுவனம் மற்றும் Education World பத்திரிகையும் இணைந்து நடத்திய 'கல்வியில் புதுமை' என்ற போட்டியில் சுமார் 25,000 பள்ளிகள் இந்தியா முழுவதிலும் இருந்து கலந்து கொண்டன. சேவாலயாவும் கலந்து கொண்டது. சேவாலயா பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு.சிட்டிபாபு கல்வியில் புதுமை புகுத்திய ஆசிரியர் என்ற வகையில் இந்தத் தேசிய விருதை, வென்றார்.

புதுமையான சிந்தனைக்கு உத்தியாகச் சொல்லப்படுவது என்னவெனில், சாத்தியமே இல்லாத ஒரு விஷயத்தை உண்மையில் நடப்பதுபோலப் பேச வேண்டும். பின்னர், அதை எப்படிச் சாத்தியப்படுத்துவது என்று விவாதிக்க வேண்டும். அந்த வகையில் ஒருவர் சொன்னதுதான், 'வாடிக்கையாளர்கள் இல்லாத ஹோட்டல்.' இதை எப்படிச் சாத்தியப்படுத்துவது என்ற யோசனையில் தோன்றிய புதிய வியாபார முறை 'Take Home' எனப்படும் ஹோட்டல்கள். ஹோட்டலிலேயே அமர்ந்து சாப்பிடாமல், ஃபோன் மூலம் ஆர்டர் செய்து வீட்டுக்கே உணவை வரவழைத்து, அல்லது நேரில் சென்று ஆர்டர் செய்து கையில் பார்சல் வாங்கிச் செல்லும் இந்த வகை ஹோட்டல்கள் இன்று பிரபலமாகிவிட்டன.





பலபேர் செய்கின்ற செயலையே தானும் செய்து 'ஊரோடு ஒத்து வாழ்'கின்றவர்கள், ஊரோடு சேர்ந்து ரேஷன் கடையில் மண்ணெண்ணெய் வாங்கலாம்; தலைவர்கள் ஆக முடியாது. 'புதியன விரும்பு' என்று பாரதி சொன்னதைத்தான் இன்று வணிக உலகில் 'Innovation' என்று பேசுகிறார்கள். புதியதாய் எதையாவது செய்கிறோம் என்று கோணங்கித்தனமாய் வித்தை காட்டுபவர்களையும் நாம் பார்க்கிறோம். அவ்வாறு இல்லாமல், ஒரு குறிக்கோளுக்காகப் புதிய பாதையில் சிந்தித்து, புதிய பாதையில் நடந்து, பலரையும் அந்தப் பாதையில் நடத்திச் செல்பவனே தலைவன் ஆகிறான்.

(சுவாசிப்போம்)

ஆடை உலகில் ஒரு நட்சத்திரம்




# உங்கள் குடும்பத்தின் கடை

தமிழ்நாட்டில் இருப்பவர்களுக்கு, நாயுடு ஹால் பற்றிச் சொல்லத் தேவையில்லை. அறுபத்தெட்டு வருடங்களாக, சென்னை வாசிகளுக்குச் சேவை செய்து வரும் கடை இது.

1939ல் தியாகராய நகரில், திரு.எம்.ஜி.நாயுடு ஒரு சிறிய கடையாகத் தொடங்கினார். இன்று பல கிளைகளுடன் பரந்து விரிந்து நிலைத்துவிட்டது. அவருக்குப் பிறகு, அவர் மகன்கள் ஜி.ராமா நாயுடுவும், ஜி.வேணு கோபாலும் அதை வளர்த்தார்கள்.

திரு.ராமா நாயுடுவின் மறைவுக்குப் பிறகு இப்போதைய எம்.டி திரு.ஜி.வேணுகோபால் தன் எளிமையோடு, அப்பா மற்றும் சகோதரரின் கொள்கைகளையும், தன் சொந்த அனுபவத்தையும் இணைத்து, நாயுடு ஹாலை நடத்தி வருகிறார். உதவிக்கு, மகள் நந்திதா கூடவே இருக்கிறார்.

**ம**களிர் உள்ளாடைகள் ஷாப் என்று தொடங்கி, எல்லாவகை ஜவுளிகளையும் கொண்ட நிறுவனமாக இன்று வளர்ந்திருக்கிறது.

தி.நகரில் 35,000 சதுர அடியில் தலைமையகம், அண்ணாநகர், வேளச்சேரி, தாம்பரம் - இப்போது முகப்பேர் என்று நான்கு கடைகளுடன், பிரும்மாண்ட அமைப்பாகி நிற்கிறது நாயுடு ஹால். சர்வதேச பிராண்ட்களின் வாசனைத் திரவியங்கள், அழகு சாதனங்கள்கூட இங்கே கிடைக்கின்றன. உள்ளாடையில் 'இண்டிமஸி' புதிய அறிமுகம்.

**நா**யுடு ஹால் ஏதோ 'மகளிர் மட்டும் ஸ்டோர்' என்று நினைக்காதீர்கள். ஆண்களுக்குத் தேவையான அத்தனை வகை ஷர்ட்டுகள், ட்ரௌசர்கள், ஜீன்ஸ் எல்லாமே NH லேபிளுடன் இங்கு கிடைக்கும். 'என்ஹான்ஸ்' புது அறிமுகம்.

ஐம்பது சதவிகிதப் பொருட்கள் இவர்களுடைய சொந்தத் தயாரிப்புகள். அதனால் தரம் - உயர்தரம்.

டிரெண்ட், ஃபேஷன் என்று இளைய தலைமுறையோடு இணைத்துப் பேசப்படும் அத்தனை வகை உடைகளும் உண்டு.

குட்டிப் பாப்பாக்களுக்கு? ஊம், அதுவும் உண்டு. உடைகள் மட்டுமல்ல, பொம்மைகளும்!

வேணுகோபாலின் மறைந்த மகன் நவீன் கற்பனையில் உருவான 'ஓ பேபி'யை அறிமுகம் செய்திருக்கிறது நாயுடு ஹால்.

படுக்கை லினன்கள், படுதாக்கள், இவை சார்ந்த பிற தயாரிப்புகள் எல்லாமே இங்கே கிடைக்கின்றன. தரம், வாடிக்கையாளர் சேவை, எக்கச்சக்க வெரைட்டி, ஏராளமான தயாரிப்புகள் இத்தனையும் இருக்கும்போது, 'உங்கள் குடும்பத்தின் கடை' என்று நாயுடு ஹாலைச் சொல்லாமல் இருக்க முடியுமா?

– சாருகேசி

# மின்னல் கதைகள்



## தாய் மண்ணுக்கு தலை வணங்கு!

கார்கில் பள்ளத்தாக்குப் பகுதியில் இந்திய ராணுவ வீரர்களின் கூடாரம்.

"பீட்டர்... வெளியில் போய் 'தம்' அடிக்க ஆசையா இருக்கு. இருட்டறைக்குள் பதுங்கி வாழும் வாழ்க்கை செம போரடிக்குது. ப்ளீஸ்... எனக்காக வாடா..." கெஞ்சினான் கோபால்.

"நோ... ராத்திரியில் 'கூடாரத்தை விட்டு ஓர் அடி அசையக் கூடாது'ன்னு கேப்டன் கட்டளை. அவர் ஆணையை மீறாதே... எதிரிப்படை உஷாராகி நெருங்கிவிட வாய்ப்பிருக்கு. இந்தச் சூழ்நிலையில் அதிக கவனம் மிக அவசியம்!" தடுத்தான் பீட்டர். "பொல்லாத ஆணை... பத்தடி தூரத்தில் ரோடு... அங்கே நின்னு குளிரை அனுபவிச்சுக்கிட்டே, புகைவிட்டால் ஜாலிடா... மூணே நிமிஷத்தில் திரும்பிடலாம்." வலுக் கட்டாயமாக பீட்டரை இழுத்துக்கொண்டு, சாலைக்குச் சென்று, சிகரெட் புகையை நான்காவது முறை வெளியே விட்ட சமயம் - அதிர்ந்தான் கோபால்.

ஒரு ஜீப் விரைந்து வந்து நிற்க - துப்பாக்கி முனையில் ஒரு கும்பல் இருவரையும் மடக்கி, கண்களைத் துணியால் கட்டி, ஜீப்பில் தூக்கிப் போட்டுக்கொண்டு மறைந்தது.

'கேப்டனின் பேச்சை மீறினது தப்பு. எதிரியிடம் வசமாக மாட்டிக்கொண்டோம்'... கிசுகிசு குரலில் வருந்தினான் கோபால்.

அரை மணி நேரப் பயணத்துக்குப் பிறகு, ஒரு கூடாரத்துக்குள் இருவரும் தள்ளப்பட்டார்கள். கண்கட்டுபிரிக்கப்பட்டது.

"புதிதாக வந்துள்ள பயிற்சி வீரர்களுக்கு எதிரி உடையை மாட்டி, நான்தான் இந்தக் கடத்தல் நாடகம் நடத்தினேன். என் ஆணையை அலட்சியப்படுத்திய உங்கள் இருவருக்கும் பாடம் புகட்ட இந்த அதிர்ச்சி டிராமா..." மெழுகுவர்த்தி ஒளியில் புன்னகையோடு அறிவுரை வழங்கினார் கேப்டன். பீட்டரும், கோபாலும் சல்யூட் அடித்தனர்.

– மாலா உத்தண்டராமன்

குணசேகரனின் செய்கை அவர் மனைவி விமலாவுக்குப் பெரிய ஆச்சரியத்தை அளித்தது. எப்போதும் குணசேகரனுக்கு இரவு பத்து மணிக்கு மேல் காம்பவுண்ட் சுவர் லைட் எரியக் கூடாது; சத்தம் போடுவார். ஆனால், இந்த பத்து நாட்களாக இரவு பன்னிரண்டு மணி வரை காம்பவுண்ட் சுவர் லைட்டை எரிய விடுகிறார். அதுவும், வெளியில் போய் எதையோ பார்த்த பிறகுதான் லைட்டை ஆஃப் செய்கிறார். அதேபோல், காலை ஐந்து மணிக்கே லைட்டை எரிய விடுகிறார். என்ன காரணமாக இருக்கும்? குழப்பமாகவும் வியப்பாகவும் இருந்தது விமலாவுக்கு.

"ஆமா விமலா... நம்ம பக்கத்து வீட்டுல குடியிருக்கற ராமசாமியோட குடிசையில கரெண்ட் இல்லை. அவன் பொண்ணு நல்லா படிக்கிறவ. நம்ம காம்பவுண்ட் சுவர் லைட் வெளிச்சம் அவன் வீட்டு வரைக்கும் வெளிச்சம் தருது. பத்து மணிக்கு மேல, பன்னிரண்டாம் வகுப்பு படிக்கிற அந்தப் பொண்ணு படிக்க சிரமப்படறா... அதான் ராத்திரி 12 மணி வரைக்கும் எரிய விடறேன். காலையில அஞ்சு மணிக்கு லைட் போடறதும் அதனாலதான்..." பெருமையுடன் பார்த்தாள் விமலா.



## காரணம்!

– கே.ஆனந்தன்

# இரண்டு ரூபாய் அரிசி; மின்சார அதிர்ச்சி!

## - அதிரடித் தகவல்கள்

**க**டந்த அக்டோபர் மாதம் 26ஆம் தேதியன்று புதுச்சேரி மாநில உணவுக் கடத்தல் தடுப்புப் பிரிவு போலீஸார், புதுச்சேரி ரயில் நிலையத்தில் வழக்கமான கண்காணிப்பை மேற்கொண்ட போது, 40 வேகன்களில் அரிசி ஏற்றப்பட்டு, ஒரு சரக்கு ரயில் புறப்படத் தயாராக நின்றுகொண்டிருந்தது. அனுப்பப்படும் சரக்கு, அரிசி என்றதும் சற்று விழித்துக்கொண்டது போலீஸ். ரயில்வே ஊழியர்களிடம் விசாரணை மேற்கொண்டதில் 2,400 டன் அரிசி அந்த வேகன்களில் ஏற்றப்பட்டு, ஆந்திராவில் உள்ள பிக்காவொலு என்ற இடத்துக்கு அனுப்புவதற்காகப் பதிவு செய்யப்பட்டது தெரிய வந்தது. ''யார் பதிவு செய்தது; பதிவு செய்தவர்களுக்கு அரிசி எப்படி வந்தது; முறையான அத்தாட்சியுடன் அரிசி செல்கிறதா?'' என்று கேள்விகள் தொடர்ந்தன. விசாரணையில் பெங்களூருவைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்படும் பி.ஆர்.எஸ். டிரேடர்ஸ் என்ற நிறுவனம் பதிவு செய்ததாகத் தெரிய வந்தது. ஆனால், விதிமுறைகளுக்கு உட்பட்டு எடுத்துப் போகப்படும் அரிசி' என்று சொல்லும் ஆவணங்கள், ரயில்வே துறையிடம் இல்லை. கடத்தவிருந்த சரக்கு பறிமுதல் செய்யப்பட்டது. போலீஸ் இன்னமும் துருவியபோது அம்பலமானதுதான், இப்போது தமிழகம் மற்றும் புதுவையில் அலசப்படும் மெகா அரிசிக் கடத்தல் விவகாரம்.



தொடர்ந்து மேற்கொண்ட அதிரடி விசாரணையில், அதிர்ச்சிமேல் அதிர்ச்சி. கடத்தப்படவிருந்த அரிசி பொது விநியோகத்துக்கு வழங்கப்பட்ட, முன்பே நான்கு முறை புதுச்சேரி ரயில் நிலையத்திலிருந்து கடத்தப்பட்டிருக்கிறது! கடந்த செப்டம்பர் மாதம் முதல் முறையாக 39 வேகன்களில் 2,340 டன் அரிசி வங்க தேசத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டிருக்கிறது. அடுத்து, அதே செப்டம்பர் மாதம் 20 வேகன்களில் 1,247 டன் அரிசி அஸ்ஸாம் மாநிலம் ஜோர்ஹாட் என்ற இடத்துக்குக் கடத்தப்பட்டிருக்கிறது. செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் மொத்தம் 60 வேகன்களில் 3,765 டன் அரிசி அஸ்ஸாம் கவுகாத்திக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. எந்தக் கிடங்கிலிருந்து கொண்டு வரப்பட்டது என்று புலனாய்வு செய்ததில், புதுவையில் உள்ள மா புட்ஸ் மற்றும் ஜெ.ஆர். புட்ஸ் என்ற நிறுவனங்களுக்குச் சொந்தமான கிடங்குகளில் சேக



ரிக்கப்பட்டு கடத்தப்படுவது கண்டு பிடிக்கப்பட்டது. அந்தக் கிடங்குகளைச் சோதனை செய்ததில் 3,500 டன் அரிசி சிக்கியது.

சென்னை சேத்துப்பட்டில் பதிவு செய்யப்பட்ட நிறுவனம் அன்னம்மாள் காசி எக்ஸ்போர்ட்ஸ். தூத்துக்குடியைச் சேர்ந்த ஆறுமுகம் என்பவர் போலியான முகவரியைக் கொடுத்து நடத்தி வந்த நிறுவனமாம் இது. ஆறுமுகம் 'ஓஹோ' வென்று அரிசி வியாபாரம் செய்வதாகச் சொல்லி, ஐ.சி.ஐ.சி.ஐ. வங்கியில் 2005ஆம் வருடம், நவம்பரில், பத்து கோடி ரூபாய் கடன் கேட்டிருக்கிறார். அவர் பெயருக்கு ஐந்து கோடி, நிறு வனத்துக்கு ஐந்து கோடி!

2006-ஆம் வருடம், மார்ச் மாதம், பத்து கோடியையும் வழங்கிவிட்டது வங்கி. ஆனால், மாதத் தவணை திருப்பிக் கட்டப்படாததால் கவலையடைந்த வங்கி, ஒரு கட்டத்தில், இந்த நிறுவனம் சேகரித்து வைத்திருந்த அரிசி யைக் கைப்பற்றி ஏலம் விட்டு விட்டது. ஏலத்தில் அரிசியை எடுத்த பி.ஆர்.எஸ். டிரேடர்ஸ் ரயிலில் அனுப்பும்போதுதான் மாட்டிக்கொண்டது. இந்த முக்கியக் கதையில் சில கிளைப் பாத்திரங்களும் உண்டு. வங்கிக்கும் ஆறுமுகத்துக்கும் இடையே பாலமாக இருந்து செயல்பட் டது, மும்பையைச் சேர்ந்த நேஷனல் கொலட்ரல் மேனேஜ்மெண்ட் சர்வீசஸ் என்ற நிறுவனம். அரிசிக் கடத்தல் விவகாரத்தில் இந்த நிறுவனத்தின் பங்கு குறித்துத் தீவிர விசாரணை நடக்கிறது. தவிர, விசாரணை வலை இறுகும்போது ரயில்வே ஊழியர்களும் சிக்குவார்கள் என்று தெரிகிறது; இதுவரை ஆறு பேர் கைதாகியிருக்கிறார்கள்.

ரயில்வே ஊழியர்கள் சரக்கைப் பதிவு செய்யும்போது, உரிய ஆவணங்களை ஏன் கேட்டுப் பெறவில்லை என்பது மில்லி யன் டாலர் கேள்வி. ஒரு பொருளை

# ஆண்டுதோறும் ஆயிரம் கோடி!

"பொது விநியோகத் திட்டத்துக்கு வழங்கப்படும் அரிசி கடத்தப்பட்டு, வருடம் ஒன்றுக்கு ஆயிரம் கோடி ரூபாய் கொள்ளையடிக்கப்படுகிறது. எந்தக் கட்சி ஆட்சியில் இருந்தாலும் இது ஒரு தொடர்கதையே" என்று சொல்லி நம்மை திடுக்கிட வைக்கிறார் ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி, அ.கி.வேங்கட சுப்பிர மணியம். பல ஆண்டுகள் உணவு மற்றும் பொது விநியோகத் துறைகளில் பணியாற்றி அனுபவம் பெற்றவர் இவர்.

"நமது நாட்டில் ஏறத்தாழ ஐந்து லட்சம் நியாய விலைக் கடைகள் மூலம், 20 கோடி குடும்ப அட்டைதாரர்களுக்கு, ஆண்டு ஒன்றுக்கு 20,000 கோடி மதிப்புள்ள அத்தியா வசிய உணவுப் பொருட்கள் விநியோகிக் கப்பட்டு வருகின்றன. இந்தத் திட்டத்துக்காக வழங்கப்படும் அரிசி, கோதுமை, மண் ணெண்ணெய் ஆகியவை தீய சக்திகளால் கடத்தப்படுவது பல்லாண்டுகளாக நடந்து வரும் ஒரு விஷயம்.

1998-ஆம் வருடம் நாடு முழுவதும்

ரயிலில் அனுப்பப் பதிவு செய்யும் போது, அந்தப் பொருள் அனுப்பும் நபருடையதுதான் என்று நிரூபிக்க போதுமான சாட்சியங்கள் கொடுக்க வேண்டும். அதிலும் அத்தியாவசிய உணவுப் பொருட்களை அனுப்பும் போது, ரயில்வேயிடம் வழங்கும் Forwarding note என்ற மனுவில் உரிய அதிகாரியின் அத்தாட்சி குறிப்பிடப்பட வேண்டும். அரிசி, கோதுமை என்றால் வட்டார வழங்கல் அதிகாரி அல்லது வருவாய்த் துறை அதிகாரிகளிடம் அத்தாட்சி பெற்றிருக்க வேண்டும். ரயில்வே அதிகாரிகள் துணையில்லாமல் இந்தக் கடத்தல் நடந்திருக்க முடியாது.

இப்போது மற்றொரு முக்கியக் கேள்வி எல்லோரையும் ஆட்டிப் படைக்கிறது. கடத்தப்பட்ட அரிசி எந்த மாநிலத்தை சேர்ந்தது?

''பிரச்னையில் சிக்கிய நிறுவனம் சென்னை முகவரியைக் கொடுத்துச் செயல்பட்டிருக்கிறது. எங்கள் மாநிலத்தில் பொது விநியோகத்துக்கு வெளி மார்க்கெட்டிலிருந்து அரிசி வாங்குகிறோம். எனவே, தமிழ்நாட்டிலிருந்துதான் இந்த அரிசி கடத்தி வரப்பட்டிருக்கக்கூடும்'' என்று உறுதியாகச் சொல்கிறார்கள் புதுவை அதிகாரிகள். ரேஷனில் கிலோ இரண்டு ரூபாய்க்கு விற்கப்படும் அரிசி, கடத்தப்பட்டு வடகிழக்கு மாநிலங்களை அடையும்போது கிலோ இருபது ரூபாயாக எகிறுகிறது. இந்தத் தகவலே மின்சார அதிர்ச்சியாக இருக்கிறது.

இந்த விவகாரமும் 2006-ஆம் வருடம் மே மாதத்துக்கு முன்பே ஆரம்பித்து விட்டது. இருந்தாலும், 'முழு உண்மையைக் கண்டறிய சி.பி.ஐ. விசாரணை கோரியிருக்கிறோம்' என்று சொல்லியிருக்கிறது தமிழக அரசு. சி.பி.ஐ. விசாரணை கோரினாலும், தமிழக அரசின் சிவில் சப்ளை போலீஸ் துறை தனியாக, தீவிரமாக விசாரணை நடத்தி சில அதிர்ச்சியூட்டும் உண்மைகளைக் கண்டறிந்துள்ளதாக, கோட்டை வட்டாரம் சொல்கிறது.

''2006ம் வருடம் மே மாதத்துக்குப் பிறகு தி.மு.க. ஆட்சியில் பொது விநியோகத் துறை முடுக்கிவிடப்பட்டது. உணவு அமைச்சரே மாநிலம் முழுவதும் இரவும், பகலும் சுற்றி ரேஷன் அரிசி கடத்தல்காரர்களை வேட்டையாடினார். இதுவரை 45 கடத்தல்காரர்கள் உள்ளே தள்ளப்பட்டிருக்கிறார்கள். அதில் ஐந்து பேர் குண்டர்கள் சட்டத்தில் இருக்கிறார்கள். நிறைய லாரிகள் கைப்பற்றப்பட்டன. கடத்தலுக்குத் துணைபோன ஊழியர்கள், அதிகாரிகள் இடைநீக்கம்

ரேஷன் பொருட்கள் கடத்தப்படுவது குறித்த ஆய்வை எடுக்குமாறு டாடா நிறுவனத்தை மத்திய அரசு கேட்டுக்கொண்டது. அந்த ஆய்வின்படி தமிழ்நாட்டில் பொது விநியோகத் திட்டத்துக்காக வழங்கப்படும் அரிசியில் மூன்றில் ஒரு பாகம் கடத்தப்படுகிறது என்பது தெரிய வந்தது. மாதம் ஒன்றுக்கு விநியோகிக்கப்படும் சுமார் மூன்று லட்சம் டன் அரிசியில், ஒரு லட்சம் டன் அரிசி கடத்தப்படுகிறது என்ற அடிப்படையில் பார்த்தால், கிலோ ஒன்றுக்கு 10 ரூபாய் லாபம் அடிக்கும் பட்சத்தில், வருடம் ஒன்றுக்கு ஆயிரம் கோடி, கடத்தல்காரர்களின் பாக்கெட்டுகளுக்குப் போகிறது.

கடத்தலைக் கண்டுபிடிக்க சிவில் சப்ளை போலீஸ் இருக்கிறது. ஆனால், ஒரு கடத்தல் லாரியைப் பிடித்து விட்டால் அதிலுள்ள ஆட்களைக் கைது செய்து, லாரியைப் பறிமுதல் செய்து வழக்குப் பதிவு செய்கிறார்களே தவிர, அந்தக் கடத்தலுக்கு மூலம் யார்? அரிசி எங்கு போகிறது



* ஆ.சி.வேங்கட சுப்பிரமணியம்

செய்யப்பட்டிருக்கிறார்கள். ஜெய லலிதா ஆட்சியில் 40 லட்சம் போலி ரேஷன் கார்டுகள் புழக்கத்தில் இருந் தன. இந்தப் போலி கார்டுகள் மூலம் வாங்கப்பட்ட அரிசியே சேகரிக்கப் பட்டுக் கடத்தப்பட்டது. ஒரு கோடியே 94 லட்சம் கார்டுதாரர்களுக்கு முறையே மாதம் 20 கிலோ அரிசி தவறாமல் வழங்கிவிடுகிறோம். அதேசமயம் முன்பு, அ.தி.மு.க. ஆட்சியில் உண வுக் கழகத்திடம் கொள்முதல் செய்த அரிசியின் அளவு மூன்று லட்சம் டன். நியாயமான கார்டுதாரர்களின் எண்ணிக்கை கொஞ்சம் உயர்ந்த போதும் இப்போது கொள்முதல் செய்யும் அளவு இரண்டேமுக்கால் லட்சம் டன்தான்.

இதில் இடைப்பட்ட அளவு உள்ள அரிசியே அ.தி.மு.க. ஆட் சிக் காலத்தில் கடத்தப்பட் டது. இப்போது உண வுக் கழகத்திட மி ரு ந் து



அரிசி கொள்முதல் செய்த லாரி, எந்த வழித்தடத்தில் செல்கிறது என்பதையும் மானிட்டர் செய்யும் வசதி இருக்கிறது. கடந்த ஆட்சியில் ஓர் அமைச்சரே தின சரி 20 லாரிகளில் ரேஷன் அரிசியைக் கடத்தியிருக்கிறார் என்பது தெரிய வந்திருக்கிறது'' என்ற திடுக் தகவலு டன் முடித்தார் அந்தத் துறை சார்ந்த இந்நிலையில், அதிகாரி ஒருவர்.

புதுவையில் வாடகைக்கு எடுக்கப் பட்ட கிடங்குகள் ஒரு வருடத்துக்கு முன்புதான் எடுக்கப்பட்டதாக ஜெய லலிதா சொல்கிறார்.

இப்போதைய தி.மு.க. ஆட்சியில் கடத்தல் கணிசமாகக் குறைந்திருக்கிறது என்று சொல்லப்படுவது எந்த வகையில் சமாதானமாக அமைய முடியும்! யாருமே அரிசி கடத்தல் அதிகரித்துள்ளது என்று ஒப்புக்கொள்ளப் போவதில்லை. பொது விநியோகம் என் றாலே ஊழலுடன் கைகோத்துக்கொண்டு தான் நடக்கிறது. ஒன் றுக்கு மேற்பட்ட மாநி லங்கள் தொடர்பான விவகாரம் இது. சி.பி.ஐ. விசாரணை, 'கடத்தல் நடந்த கால கட்டத்தை' கண்டு பிடித்து வெளி யிடும்போது, யார் யார் தலை உருளுமோ?

- ஸ்ரீநி

என்றெல்லாம் 'பல காரணங்களால்' ஆய்வு செய்வதில்லை.

கடத்தலுக்கு முக்கிய காரணம் போலி ரேஷன் கார்டுகளும், அரிசி வாங்காத கார்டுகளும்தான். இதைக் கண்டுபிடிப்பது எப்படி? 1997-ஆம் ஆண்டு தமிழக அரசின் உணவுத் துறை (G.O.225) ஆணை ஒன்று போட் டிருக்கிறது. அதன்படி ஒருவர், ரேஷன் கடைக்குச் சென்று கார்டுதாரர்கள் பட்டியலைக் கொண்ட ரிஜிஸ்டரைப் பார்வையிட்டு, நகல் எடுக்கலாம். அதே போல் ஸ்டாக் ரிஜிஸ்டரையும் சோதிக் கலாம். பேட்டை ரவுடிகள், அரசியல்வாதிகள் மிரட்டல் மற்றும் அராஜகம் காரணமாக, தனி மனிதர்கள் இந்த வேலைகளில் ஈடுபடத் துணிய மாட்டார்கள். கார்டுதாரர்களின் பட்டியலை எடுத்து ஏரியாவில், வீடு, வீடாகச் சோதனைச் செய்து, போலி கார்டுகளின் பட்டியலை உரிய அதிகாரிக்குக் கொடுத்து நடவடிக்கை எடுக்கச் செய்யலாம். இதனால் ஊழல் ஒழிய வாய்ப்பிருக்கிறது'' என்கிறார் அ.கி.வேங்கடசுப்ரமணியம்.

## சோ எழுதிய மஹாபாரதம் பேசுகிறது

ரூ.600/- (இரண்டு பாகங்கள்)

**வால்மீகி ராமாயணம்**
ரூ.600/- (இரண்டு பாகங்கள்)

**ஹிந்து மஹா சமுத்திரம்**
ரூ.220/- (முதல் பாகம்)

**அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்** (ரூ.145)

மற்றும் நாடகங்கள், நாவல்கள், தனிக் கட்டுரைகள், கேள்வி-பதில் நூல்கள்

## எஸ். குருமூர்த்தி எழுதிய தண்ணீர் விட்டோ வளர்த்தோம்

(மூன்று பாகங்கள் ரூ. 525/-)

25000 க்கும் மேற்பட்ட பழமொழிகளைக் கொண்ட ஒரே தமிழ் நூல்

## கி.வா.ஜ. தொகுத்த தமிழ்ப் பழமொழிகள்

4 தொகுதிகள் - ரூ. 400/-

**கி.வா.ஜ.பதில்கள்**
(3 தொகுதிகள்) ரூ.150/-

**அபிராமி அந்தாதி விளக்கவுரை**
4 தொகுதிகள் - ரூ. 400/-

**கந்தரலங்காரச் சொற்பொழிவுகள்**
(6 தொகுதிகள்) ரூ.735/-

## வி.ஸ. காண்டேகர் எழுதி கா.ஸ்ரீ.ஸ்ரீ மொழிபெயர்த்த யயாதி

ரூ. 220/- மற்றும்-

• புயலும் படகும் • அமுதக் கொடி • கருகிய மொட்டு • அரும்பு
• இரு மனம் • கிரௌஞ்சவதம் • சுகம் எங்கே? • வெண் முகில்
• வெறும் கோயில் • கூட்டுக்கு வெளியே • கண்ணீர் • ஆஸ்திகன்
• இரு துருவங்கள் • எரி நட்சத்திரம் • வாயு கன்னிகை
• வி.ஸ. காண்டேகர் கதைகள்- நான்கு தொகுதிகள்

---

தன்வந்திரி, கைராசிக்காரர்-என்றெல்லாம் புகழப்பெற்ற

## Dr. எஸ். ஜெகத்சன் MBBS டாக்டர் சொல்கிறார்

நோய்கள் அவற்றின் காரணங்கள், சிகிச்சை முறைகள் ஆகியவற்றை கேள்வி-பதில் மூலம் விளக்கும் புத்தகம் ரூ. 90/-

---



அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் புத்தக நிறுவனம்)
ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, த.பெ.எண்.617,
மயிலாப்பூர், சென்னை 600 004- தொ.பே. 24 64 13 14
e.mail: srinivasan@alliancebook.com - www.alliancebook.com




குமரேசன், சோர்ந்துபோய் வெளியே வந்தான். அவன் அப்படியொன்றும் செலவாளியல்ல. அப்படியிருந்தும் தந்தை அவனைக் கோபித்துக்கொண்டதை, அவனால் எளிதில் ஜீரணித்துக்கொள்ள முடியவில்லை.

''இப்படிச் சொந்தச் செலவு ஆயிட்டே போனா... ஹாஸ்டல் வாழ்க்கையையே முடிச்சிக்கிட வேண்டியதுதான். உன்னைப் போலத்தான் உன் தம்பியும், ஹாஸ்டல்லே படிக்கிறான். இன்னும் சொல்லப்போனா, சென்னையில செலவு எக்கச்சக்கம். இருந்தும், அவன் உன்னை மாதிரி ஊதாரியில்லை. திருச்சியிலே அப்படி என்னதான் செலவோ...?'' என்ற தந்தையின் குமுறலைத் தம்பியிடம் கேட்டுவிடலாம் என்று நினைத்து மாடியிலுள்ள கதிரேசனின் அறைக்குள் நுழைந்தான்.

தம்பி கதிரேசனோ, இந்த உலகின் நினைவே இல்லாமல் வாக்மன் இசையில் ஆழ்ந்திருந்தான். வாய், நொறுக்குத் தீனியை அசைபோட்டுக்கொண்டிருந்தது.

இரண்டு நிமிட மௌனத்துக்குப் பின் குமரேசன்தான் பேசினான்.

''தம்பி, உன்னைப் பார்த்தா பொறா

**சஜன்**

# சிறுகதை

மையா இருக்குடா.''

''என்னண்ணா, என்ன விஷயம்?''

''சீரியஸாத்தான் கேட்கிறேன். இந்த வருஷம் படிப்பு, ஹாஸ்டல் செலவு போக, உன்னுடைய சொந்தச் செலவு எவ்வளவு ஆச்சு?''

''எல்லாம் போக, மாசக் கணக்குப் பார்த்தாக்கூட, இருநூறு ரூபாயிலிருந்து முன்னூறு ரூபாய் வரை ஆகியிருக்கும்.''

''தம்பி, முன்னூறையே விட்டுத் தள்ளு. குறைந்தபட்சம் இருநூறுன்னு கணக்குப் போட்டாலும், ரெண்டாயிரம் ரூபாய்க்கு மேலே, செலவழிச்சிருக்கியே. இத்தனைக்கும் நீ, பி.ஏ.தான் படிக்கறே; நானோ போஸ்ட் கிராஜுவேட் கோர்ஸ்...''

''அதுக்கு என்ன இப்போ?''

''நீயும், நானும் ஒரே வயிற்றுப் பிள்ளைகள்தானே. நான் ஆயிரம் ரூபாய் செலவு செஞ்சுட்டேனாம், அப்பா என்னை ஒண்ணுக்கும் பிரயோஜனம் இல்லாதவன்''னு கண்டபடித் திட்டிட்டார்.''

குமரேசனின் குமுறலைக் கேட்டு, கதிரேசன் சிரித்தேவிட்டான்.

''அண்ணா, என்னமோ ஏதோன்னு பயந்துட்டேன். தெரிஞ்சோ தெரியாமலோ, அப்பா என்னை சைக்காலஜி படிக்க வெச்சது எவ்வளவு நல்லதாப் போச்சு பார்த்திங்களா? நான் அந்த சைக்காலஜியை ப்ராக்டிகலா அப்ளை பண்ணுறேன். அவ்வளவுதான்!''

''அந்தப் பாழாப்போன சைக்காலஜியை எனக்கும்தான் கொஞ்சம் சொல்லேன்...''

''சொல்றேண்ணா! அதுக்கு முன்னாடி நீ ஒண்ணு தெரிஞ்சிக்கணும். காமர்ஸ் படிக்கிற உனக்கு 'வரவு'ன்னு ஒண்ணு இருந்தா 'செலவு'ன்னு ஒரு அக்கவுண்ட் இருந்தாகணும்னு தெரியுமில்ல. அது மாதிரி, இந்த உலகத்திலே பெரும்பாலானவங்க 'பலன்'னு ஒண்ணை எதிர்பார்த்துத் தான் எந்த ஒரு செயலையும் செய்யறாங்க அப்பா, அம்மாகூட.''

''என்ன தம்பி இது. நீ பேசறதே புது மாதிரியாயிருக்கு. நாம அப்பா, அம்மாவுக்குத் திருப்பிச் செய்யறதுக்கு நம்ம கிட்ட தனிப்பட்ட முறையிலே ஏது பணம்? அவங்க கொடுக்கற பணம் தானே. அதையே திருப்பித் தரச் சொல்றியா?''

''அண்ணா, இன்னும் விளக்கமாகச் சொல்றேன். கேளு. தான் வாங்கிக் கொடுத்த பிஸ்கட்டில் ஒரு பாதியைத் தின்றுவிட்டு, 'அப்பா, இந்தா உனக்கு' என்று மழலை பேசும் குழந்தையைக் கண்டு, எந்தத் தகப்பனாவது கோவிச்சுக்குவானா?''

''ஹூம்... அதுமாதிரி...''

''நம்மகிட்டே அன்பு செலுத்தற



''உன் மனைவி கரண்டியை எடுத்து வீசும்போது, கொஞ்சம் நகர்ந்திருந்தால் அடிபடாமத் தப்பிச்சுருக்கலாமே!''

''சேச்சே, அவளால சின்ன ஏமாற்றத்தைக்கூடத் தாங்க முடியாது.''

- வீரணம் சரவணன்

அப்பா, அம்மாகிட்டே...''

''ஏன்... என் அன்பிலும் பாசத்திலும் என்ன குறை?''

''அதை நீ எப்படிப் புரிய வெக்கறே?''

''நீ மட்டும் அப்படி என்ன புரிய வெச்சிட்டே?''

''அண்ணா, அன்பைத் திருப்பிச் செலுத்தறதிலே 'விலை'ங்கற சொல்லுக்கே அர்த்தம் கிடையாது. அப்பாவுக்கு நான் வாங்கிக் கொடுத்த ஸ்வெட்டரோட விலை நூறு ரூபாகூட இருக்காது. ஆனால், அந்த ஸ்வெட்டரை நான் அப்பாகிட்டே கொடுத்து, 'அப்பா, உங்களுக்கு இந்த மார்கழி மாசத்திலே குளிரு தாங்காதுன்னு இந்த ஸ்வெட்டரை வாங்கி வந்தேம்ப்பா. குளிருக்கு இது இதமா இருக்காப்பன்னு கேட்டபோது, ஏதோ நானே ஸ்வெட்டர் பின்னித் தந்த மாதிரி சந்தோஷப்பட்டார். மறுநாள் ஊருக்குக் கிளம்பறப்போ ரெண்டு நூறு ரூபாவ செலவுக்கு வெச்சுக்கோன்னு கொடுத்தார். இது மாதிரிதான் அம்மாவும், தன் பங்குக்கு ஒரு நூறு ரூபாயைக் கையிலே திணிச்சாங்க. ஏன், தங்கச்சி தேவியை விட்டுவிட முடியுமா? நான் பிளாஸ்டிக் முத்து மாலையை ஆசையா அவள் கழுத்திலே போட்டபோது, தான் அணிஞ்சிருந்த தங்கச் செயினைக் கழற்றி வெச்சுட்டுப் பக்கத்துவீட்டு ஸ்நேகிதியிடம் ஓடிப்போய், 'எங்க அண்ணன் மெட்ராஸிலிருந்து வாங்கி வந்தாரு. அவருக்கு என்மேல எவ்வளவு பாசம்'னு சொல்றப்போ, எனக்கே உடம்பெல்லாம் புல்லரிச்சுப் போச்சு. நான் எவ்வளவோ தடுத்தும்கூடத் அவ பாக்கெட் மணியிலிருந்து ஐம்பது ரூபாயை என் பெட்டியில் போட்டுடுச்சு. நாம கொடுக்கும்போது, அதுவும் பாசத்தையும், அன்பையும் கொட்டிக் கொடுக்கும்போது, எந்தத் தகப்பனும் தாயும், மகனின் பரிசுப் பொருளை வாங்கிக்க மறுத்ததாக, இதுவரை சரித்திரமே கிடையாதே! இப்ப புரியுதா நான் செலவழிக்கிறதைவிட மூன்று மடங்குக்கு மேல் எனக்கு வருமானம்!''

தம்பி கதிரேசனின் வார்த்தைகளில் அசந்துபோன குமரேசன், ''இந்தா அண்ணா! உனக்காக வாங்கி வந்த கர்சீஃப்'' என்று கதிரேசன் நீட்டியபோது நெகிழ்ந்தே போனான்!

●

## தூறல் கவிதை

வினாடிக்கும்
குறைவான
நேரத்தில்
உமிழ்ந்துவிட்டு
வந்திருக்கிறேன்
சினம் தோய்ந்த
சொற்களை;
பொறுக்கி
எடுக்கத்தான்
போதவில்லை
வருடங்கள்
தலைமுறையாய்த்
தொடரும் பகை!

- பா. ராஜா

# செவக்காட்டுச் சித்திரங்கள் 5

# சிந்தாமணிப் பருப்பு

வே. இராமசாமி



அடுப்பில் நிலக்கடலை அவியும் வாசம். விளையாண்டுட்டு இருந்த கண்ணனும் முருகனும் அடிக்கொருதரம் வீட்டுக்குள்ளே போய் எட்டிப் பாத்துட்டு வந்தாங்க. கண்ணன் அவசரப்பட்டு உலை மூடியைத் திறந்து பாத்தான். 'அவியறதுக்குள்ள என்னல அவசரம்?' அம்மா களிக்கிண்டும் துடுப்பால அவன் முதுகில ஒரு குடுப்பு குடுத்தாள். அவன் 'யாத்தே'ன்னு அழுதுக்கிட்டே போய் குலுக்கை இடுக்கிலே உக்காந்துக்கிட்டான்.

ஒரு வழியா அம்மா மண்பானை நிமுர, கடலை அவிச்சப் பிரிமணை மேலே எறக்கி வச்சா. ஓட்டமா ஓடிப்போய் உழக்கை எடுத்துட்டு வந்து அம்மாகிட்டே நீட்டினான் முருகன். அவ ஈயக் கரண்டியால அள்ளிப்போட்டா. அவன் பாட்டுக்கு நறிச் நறிச்னு உரிச்சுத் தின்னான். கண்ணனுக்கு ரொம்பப் பிடிச்ச உதட்டு தம்ளரில் போட்டு அவன்கிட்ட குடுத்தா. எந்தப் பண்டம் தின்னாலும் அவன் அதுலதான் திம்பான்.

இப்படியே ரெண்டுபேரும் தின்னுட்டு இருக்கும்போது, திடீர்னு குலுக்கை இடுக்குலர்ந்து கண்ணன் எட்டிப் பார்த்தான். அவங் காதிலே கடலைத் தோலுல கம்மல் மாட்டியிருந்தான்.

அப்படியே எட்டிப் பாத்தவன் ''யம்மா''ன்னு அம்மாட்ட போனான். அவ ''என்னலே''ன்னா. ''இங்கபாரு, இந்தப் பருப்பு செவேர்னு இருக்கு'' அப்படினான். இதைப் பாத்திட்டிருந்த முருகனும் அவன்கிட்டத்திலே போயி நின்னான்.

''இதாம்ல சிந்தாமணிப் பருப்பு. ஒரு மகருல்ல இப்படி எதுனாச்சும் ஒண்ணு ரெண்டு கடலைதான் இருக்கும். மனுசங்க சில பேருக்குக் கை கால்ல ஆறு விரல் இருக்குல்ல, அதுமாதிரி கடலயிலையும் ஒவ்வொண்ணுல மூணு பருப்பு இருக்கும். அந்த மூணுமே விரல்ல இரத்தங் கட்டினா நெயில் பாலீசு மாதிரி சிவப்பா ஆயிரும்ல, அந்தக் கணக்கா இருக்கும்.

## மடக்குன கையைப் பிரிச்சா அதுவும் கீறிப்

தின்னவன் பல்லுல செவப்பாத் தெரியும். யோகக்காரனுக்குத்தான் சிந்தாமணிப் பருப்பு வரும்''ன்னா அம்மா.

அம்புட்டுதான்... அன்னி லேர்ந்து கண்ணன் பயலுக்குச் சிந்தாமணிப் பருப்புக் காய்ச்சல் வந்திருக்க. இப்படித்தான் ரெத்தக் கோலிக்காய் - மேல ஆசைப்பட்டு நூத்துக்கணக்கா சேத்துப் பொட்டணம் போட்டு வச்சிருக்கான். 'ஏன்ட்ட ரெத்தக் கடசல் ரொம்ப இருக்கு'ன்னு சொல்லிக்கிட்டிருந்தான். இப்பக் கொஞ்ச நாளாத்தான் ரெத்தக் கோலி சேர்மானத்தை விட்டிருந்தான். இனிச் சிந்தாமணிப் பருப்பைத் தேட ஆரம்பிச்சுருவான். எதுனாச்சும் கண்ணுக்குத் தெரிஞ்சா பயல் என்ன ஏதுன்னு நோண்டிப் பாத்துட்டுத்தான் விடுவான்.

இப்படி இருக்கைல ஒரு நாள் நைட்டு கண்ணனைக் காணவில்லை. அம்மா 'எம்புள்ளையைக் காங்கலையே'ன்னு அழுதுக்கிட்டுக் கிடந்தாக. அப்பா, பெரியப்பா, ஊர்ல இளவட்டங்கல்லாம் தேடுனாங்க. பயல எங்கன தேடியுங் கிடைக்கல. கடைசில கோழி கூப்பிடத்தான் ஒரு தாக்கல் வந்தது. பயல் நாய்க்கரு வீட்டுக்குக் கடலை உரிக்கப் போயிட்டான்.

விதைப் பருப்புக்கு விவசாய வீடுகள்ல கடலைத் தோல் உரிச்சு பருப்பு எடுப்பாங்க. ஒரு பக்காவுக்கு இம்புட்டுத் துட்டுக் குடுத்திருவாக. நம்மாள்னு பயலும் அதுக்குப் போயிருக்கான். இவன் எதுக்குப் போயிருப்பான்? சிந்தாமணிப் பருப்புத் தேடும் படலத்துக் காகத்தான் போயிருந்தான்.

அப்பாவுக்குக் கோபம் வந்திருச்சு. தட்டைக் குச்சிய எடுத்துட்டு இருட்டோட இருட்டாப் போயி, கண் ணனை நாலு சாத்துச் சாத்தி இழுத்துட்டு வந்தாக. சம்சாரிகளுக்கு உடுப்புத் துணி இல்லாட்டியும் கவுரவத்துக்குக் குறைச்சல் இருக்காது. அவங்க புஞ்சைல வேலை இல்லாட்டியும் அடுத் தவன்கிட்ட வேலைக்குப் போகமாட் டாங்க. வேணும்னா சக சம்சாரிக்கு வேலைக்குப் போவாங்க. அவங்க பதி லுக்கு இவனுக்கு வேலை இருக்கும் போது வந்து செய்வாங்க, சம்பளம் கிடையாது; வேலைக்குப் பதில் வேலை. இதை மாத்து வேலைம் பாங்க.

வழக்கம் இப்படி இருக் கைல, கண்ணன் அடுத்த ஆள் கிட்ட வேலைக்குப் போனா அப்பா விடுவாரா? எங்காச்சும் போனா காலை ஒடிச்சுருவேன்ட் டாரு. ஆனாலும் நம்ம ஆளுக்கு 'சிந்தாமணி பித்து' நாளுக்கு



## ஒரே ஒரு சிந்தாமணிப் பருப்பு. பிளந்து இருக்கு.

நாள் ஏறிட்டிருந்துச்சு.

அந்த வருஷம் கண்ணனோட செவக்காட்டுப் புஞ்சைல கடலை ஆய்கிற நாளும் வந்துச்சு. சிலம்பாரத்துல இருந்து ஆளுங்க வந்தாங்க. அப்பா எல்லாருக்கும் தட்டுப் பிரிச்சு விட்டுட்டாரு. எல்லா ஆளுகளும் செடியைப் புடுங்கி, கடலையைத் திருகி, ஆய்ஞ்சு அவுகவுக கொண்டாந்த கொட்டாம்பெட்டில போட்டாக. பெட்டி நிமுந்ததும், முருகனும் கண்ணனும் அதை வாங்கி வாங்கி அப்பாகிட்ட கொண்டுபோய் கொடுப்பார்கள். அவரு மூட்டைல மூட்டி சைக்கிள்ல ஏத்திக் களத்துல போய் காயப் போடுவாரு. அங்கன இருந்து லாரில கோவில்பட்டி லெச்சுமி மில்லுக்குப் போகும்.

அந்தவாட்டி கடலைக்கு விலை கம்மின்னு சொல்லி மூட்டைகளை வீட்டுல அடுக்கினாரு அப்பா. பத்து முப்பது மூட்டையிருக்கும்.

ஒரு நாள் மத்தியானம் போல வீட்ல யாருமில்ல. நம்மாளு சிந்தாமணி வேட்டைய ஆரம்பிச்சிட்டான். அடுக்குன மூட்டைல அடி மூட்டைய கோழி கொத்தியிருக்கு. அதை கிழிஞ்ச சீலைத்துணி சொருவி ஒட்டைய அடைச்சி விட்டிருக்க அம்மா. இவன் மெல்ல அதை உருவுனதும் கொஞ்சம் கடலைகள் சிதறிருக்கு. கொஞ்சம் கொஞ்சமா ஒட்டைய புள்ளயாண்டான் தொளைச்சிருக்கான். அடி மூட்டை சரிஞ்சிருக்கு. அடி மூட்டை சரிஞ்சா என்னாகும்? எல்லா மூட்டையும் பொதுபொதுனு விழுந்து கண்ணன் உள்ள அம்புட்டுக்கிட்டான். அதோட இல்லாம வீட்டு வாசலையும் மூட்டைகள் அடைச்சுக்கிடுச்சு.

சாயங்காலம் அம்மா வந்ததும் ஓலம் போட்டு ஊரைக் கூட்டிட்டாள். இளவட்டங்கள்லாம் ஒட்டப் பிரிச்சு மூட்டையைப் புரட்டுனாங்க. முருகன்கிட்ட 'ஏல தம்பிய எங்கன்னா, தெரியலன்னான். எங்கிட்டாச்சும் போயிருப்பான்'னு எல்லாரும் நினைச்சாக. ஆனா, புள்ளை மூட்டைகளுக்கு அடில கிடந்துருக்கு. எல்லாத்தியும் புரட்டுன பெறவு பாத்தா, உள்ள பேச்சு மூச்சில்லாம கெடக்கான்.

இதுக்குள்ளயும் பொம்பிளைய அழ ஆரம்பிச்சிட்டாக. மடக்குன கையைப் பிரிச்சா ஒரே ஒரு சிந்தாமணிப் பருப்பு. அதுவும் கீறிப் பிளந்து இருக்கு. உசிரு இருக்கா பாருங்கன்னு கப்பாச்சி சொன்னா. அவளே தண்ணிய எடுத்து மூஞ்சில தெளிச்சா. மெல்ல கண்ணு முழிச்சான். கொஞ்ச நாள் கழிச்சுக் கடலை மூட்டைகளும் கோயில்பட்டி போய்ச் சேந்தன; அவனும் தெளிஞ்சிட்டான்.

இப்பல்லாம் நம்மாளு சிந்தாமணிப் பருப்பை மறந்துட்டான்... கலர்கலரா கண்ணாடி வளையல் துண்டுகள் சேத்துக்கிட்டு வர்றான்.

***(மண்வாசம் வீசும்)***



"உங்க உடம்புல சூடு எக்கச்சக்கமா இருக்கு..."

"எப்படிச் சொல்றீங்க..?"

"உங்க மூக்குல ஆக்ஸிஜன் வச்சதும், குழாயே பத்திக்கிச்சு பாருங்க."

– எம்.ஆர்.மூர்த்தி

"நம்ம அரசர், அரசியல்வாதியா மாறிட்டாரா, எப்படி?"

"எதிரி மன்னன் போருக்கு வருவதாக ஓலை வந்தவுடன், கஜானாவைக் காலி பண்ணச் சொல்றார்."

– அ.சுஹைல் ரஹ்மான்



# கஜானாவை



"என்ன ஆச்சரியம்! நம் மன்னரோடு போர் புரிய மற்ற மன்னர்கள் யாரும் முன் வரவில்லையே. ஏன்?"

"ஜெயித்தவருக்கு இளவரசியைத் திருமணம் செய்து தரப்போவதாகப் பயமுறுத்தினாராம்!"

– என்.உஷாதேவி

# காவி பண்ணு!

"பதுங்கு குழிகளையெல்லாம் மூடிவிடும்படி மன்னர் உத்தரவிட்டுள்ளாராமே ஏன்?"

"புறமுதுகிட்டு ஓடிவரும்போது, அதில் விழுந்துடாமல் இருக்கத்தான்!"

– ச.ஆ.கேசவன்



"என்ன டாக்டர், ராகு காலத்தில் ஆபரேஷன் பண்றீங்க?"

"ஆபரேஷன் ஃபெயிலியர் ஆயிடுச்சுன்னா பழியை அதுமேல போட்டுடலாமே!"

– ஆர்.நரசிம்மன்



"ஏன் உன் மாமியார் சின்ன புள்ளைங்க மாதிரி பலூனை ஊதிக்கிட்டு இருக்காங்க?"

"அவங்களுக்கு எப்பவுமே எதையாவது ஊதிப் பெரிசாக்கணும், அவ்வளவுதான்!"

– வெ.சீதாராமன்



# 2. சந்திப்பு

**மா**மல்லபுரத்தில் கலைத் திருவிழா வழக்கம்போல நடந்துகொண்டிருந்தது. இவ்வருஷம் சக்கரவர்த்தி திருவிழாவுக்கு விஜயம் செய்யவில்லை. சில காலமாகச் சக்கரவர்த்தி ஏதோ துக்கத்தில் ஆழ்ந்திருப்பதாகவும், அதனால்தான் கலை விழாவுக்கு வரவில்லையென்றும் ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். வேறு சிலர், சக்கரவர்த்தி கொஞ்ச காலமாக பல்லவ நாட்டிலேயே இல்லையென்றும், அவருடைய குமாரன் இலங்கையிலிருந்து திரும்பிய பிறகு, அவனிடம் இராஜ்ய பாரத்தை ஒப்புவித்துவிட்டு மாறு வேஷத்துடன் தேச யாத்திரை போயிருக்கிறார் என்றும் சொன்னார்கள்.

ஆனால், சக்கரவர்த்தியின் குமாரன் மகேந்திரனும், குமாரி குந்தவி தேவியும் இவ்வருஷம் கலைவிழாவுக்கு விஜயம் செய்திருந்தபடியால், மாமல்லபுரவாசிகள் சிறிதளவும் உற்சாகம் குன்றாமல் விழாவைச் சிறப்பாக நடத்தினார்கள்.

**க**லை விழாவின் காட்சிகளையும் கற்பாறைகளில் செதுக்கிய அற்புதமான சித்திரங்களையும், ஆங்காங்கு நடைபெற்றுக்கொண்டிருந்த இசை விருந்து, நாட்டியம், கூத்து ஆகியவைகளையும் பார்த்து அனுபவித்துக்கொண்டு கப்பலிலிருந்து இறங்கிய நமது இரத்தின வியாபாரி குறுக்கும் நெடுக்குமாகப் போய்க் கொண்டிருந்தான்.

அவனுடைய முகத்தில் அபூர்வமான கிளர்ச்சி தோன்றியது. கண்களில் அளவில்லாத ஆர்வம் காணப்பட்டது. எவ்வளவுதான் பார்த்த பிறகும் கேட்ட பிறகும்கூட அவனுடைய இருதய தாகம் தணிந்ததாகத் தெரியவில்லை. பார்க்கப் பார்க்க, கேட்கக் கேட்க, அந்தத் தாகம் அடங்காமல் பெருகிக்கொண்டிருந்த தென்று தோன்றியது. அந்த அதிசயமான சிற்பக் காட்சிகளையும், உயிருள்ள ஓவியங்களையும் பார்க்கும்போதும், ஊனையும் உள்ளத்தையும் உருக்கும் இசை அமுதத்தைப் பருகும்போதும் அவன் அடைந்த அனுபவம் ஆனந்தமா? அல்லது அருவையா? அல்லது இரண்டும் கலந்த உணர்ச்சியா?

இரத்தின வியாபாரிக்குப் பக்கத்தில் தலையிலும் தோளிலும் மூட்டைகளைச் சுமந்துகொண்டு ஒரு குள்ளன் போய்க் கொண்டிருந்தான். அவனுடன் இரத்தின வியாபாரி ஜாடை காட்டிப் பேசுவதைப் பார்த்தால் குள்ளனுக்குக் காது செவிடு என்று ஊகிக்கலாம். அவன் செவிடு மட்டுமல்ல - ஊமையாகக்கூட இருக்கலாமென்றும் தோன்றியது. தன்னுடைய நடவடிக்கைகளைப் பற்றி வேறு யாருக்கும் தெரியப்படுத்த முடியாமலிருக்கும் பொருட்டே, நமது இரத்தின வியாபாரி



# பார்த்திபன் கனவு

## அமரர் கல்கி

அத்தகைய ஆளைப் பொறுக்கி எடுத்திருக்க வேண்டும்.

ஆமாம்; அந்த இளம் வர்த்தகனின் நடவடிக்கைகள், கவனித்துப் பார்ப்பவர்களின் உள்ளத்தில் சந்தேகத்தை உண்டு பண்ணுவனவாய்த்தான் இருந்தன. அவன் ஆங்காங்கு சிற்பக் காட்சியோ, சித்திரக் காட்சியோ உள்ள இடத்தில் சிறிது நேரம் நிற்பான். சிற்பங்களையும் சித்திரங்களையும் பார்ப்பதோடல்லாமல், பக்கத்தில் நிற்கும் சிற்பிகளையும் கவனிப்பான். அவர்களில் யாராவது ஒருவன் தனித்து நிற்க நேர்ந்தால் அவனை நெருங்கி முதுகைத் தட்டி, "உன்னிடம் ஒரு விஷயம் பேச வேண்டும்; கொஞ்சம் ஒதுக்குப்புறமாக வருகிறாயா?" என்று கேட்பான். இரத்தின வியாபாரியின் கம்பீரத் தோற்றத்தையும் களையான முகத்தையும் பார்த்த யாருக்குத்தான் அவன் பேச்சைத் தட்ட மனம் வரும்? அவன் சொற்படியே கொஞ்சம் தனியான இடத்துக்கு அவர்கள் வருவார்கள்.



அவர்களிடம் அவ்வர்த்தகன் கடல்களுக்கு அப்பால் தான் வசிக்கும் தேசத்தைப் பற்றியும், அந்த தேசத்தின் வளம், செல்வம் ஆகியன பற்றியும் பிரமாதமாக வர்ணிப்பான். கரிகாலச் சோழ சக்கரவர்த்தியின் காலத்தில் கடல் கடந்து சென்ற தமிழர்கள்தான் அத்தேசத்தில் வசிக்கிறார்களென்றும், அவர்களுக்குத் தாய்நாட்டிலுள்ளவை போன்ற திருக்கோயில்களும் சிற்பங்களும் இல்லையே என்ற ஒரு குறையைத் தவிர, வேறு குறையே கிடையாதென்றும் எடுத்துச் சொல்வான்.

"அந்த தேசத்துக்கு நீ வருகிறாயா? வந்தால், திரும்பி வரும்போது பெருஞ் செல்வனாகத் திரும்பி வரலாம். அந்த நாட்டில் தரித்திரம் என்பதே கிடையாது. தெருவெல்லாம் இரத்தினக் கற்கள் இறைந்து கிடக்கும்!" என்று சொல்லி, குள்ளன் தூக்கிக்கொண்டு வந்த பையிலிருந்து ஒரு பிடி இரத்தினக் கற்களை எடுத்து அவர்களிடம் காட்டுவான்.

இரத்தின வியாபாரியின் பேச்சிலேயே அநேகமாக அந்தச் சிற்பி மயங்கிப் போயிருப்பான். கை நிறைய இரத்தினக் கற்களைக் காட்டியதும், அவன் மனத்தை நிச்சயப்படுத்திக் கொண்டு தன்னுடைய சம்மதத்தைத் தெரிவிப்பான். அப்படிச் சம்மதம் தெரிவிக்கும் ஒவ்வொருவரிடமும் பெரிய இரத்தினம் ஒன்றைப் பொறுக்கிக்

கொடுத்து, ''அடுத்த அமாவாசையன்று புலிக்கொடி உயர்த்திய கப்பல் ஒன்று இந்தத் துறைமுகத்துக்கு வரும். அந்தக் கப்பலுக்கு வந்து, இந்த இரத்தினத்தைக் காட்டினால் கப்பலில் ஏற்றிக் கொள்வார்கள்'' என்பான் நமது இளம் வர்த்தகன்.

கூலைத் திருவிழா நடந்த மூன்று தினங்களிலும் இரத்தின வியாபாரி மேற்சொன்ன காரியத்திலேயே ஈடுபட்டிருந்தான். மூன்றாவது நாள் விஜயதசமியன்று அவன் வீதியோடு போய்க் கொண்டிருக்கையில், திடீரென்று எதிர்பாராத ஒரு காட்சியைக் கண்டான். (எதிர்பாராததா? அல்லது ஒருவேளை எதிர்பார்த்ததுதானா? நாம் அறியோம்.) ஆம்; அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட நங்கை முன் போலவே பல்லக்கில் சென்ற காட்சிதான்.

மூன்று வருஷத்துக்கு முன்பு பார்த்ததற்கு இப்போது அந்தப் பெண்ணின் முகத்தில் சிறிது மாறுதல் தோன்றியது. அன்றைக்கு அவளுடைய முகம் சூரியன் அஸ்தமித்த பிறகு நீலக் கடலில் உதயமாகும் பூரண சந்திரனைப் போல் பசும்பொன் காந்தியுடன் பிரகாசித்தது. இன்றோ அதிகாலை நேரத்தில் மேற்குத் திசையில் அஸ்தமிக்கும் சந்திரனைப் போல் வெளிறிய பொன்னிறமாயிருந்தது. அப்போது முகத்தில் குடிகொண்டிருந்த குதூகலத்துக்குப் பதிலாக இப்போது சோர்வு காணப்பட்டது. விஷமம் நிறைந்திருந்த கண்களில் இப்போது துயரம் தோன்றியது. இந்த மாறுதல்களினாலே அந்த முகத்தின் சௌந்தரியம் மட்டும் அணுவளவும் குன்றவில்லை; அதிகமாயிருந்ததென்றும் சொல்லலாம்.

வீதியோடு போய்க்கொண்டிருந்த இரத்தின வியாபாரி தனக்குப் பின்னால் கூட்டத்தில் ஏதோ கலகலப்புச் சத்தம் உண்டாவதைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். காவலர் புடை சூழ சிவிகை வருவதைக் கண்டான். அச்சிவிகையில் இருந்த பெண் தன் இருதய மாளிகையில்

**வீரர்களில் ஒருவன் இரத்தின வியாபாரியை நோக்கி வந்தான். அருகில் வந்ததும், "அப்பா! தேவிக்கு உன்னிடம் ஏதோ கேட்க வேண்டுமாம்; கொஞ்சம் வந்துவிட்டுப் போ!"**

குடிகொண்டிருந்தவள்தான் என்பதை ஒரு நொடியில் தெரிந்துகொண்டான். அச்சமயத்தில் அவன் நெஞ்சு விம்மிற்று; கண்களில் நீர் ததும்பிற்று. இம்மாதிரி சந்தர்ப்பம் நேருங்கால், என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி அவன் யோசித்து வைத்திருந்ததெல்லாம் சமயத்துக்கு உதவவில்லை. வீதி ஓரமாக ஒதுங்கி நின்றுகொண்டான். பல்லக்கின் பக்கம் பார்க்காமல் திரும்பி வேறு திசையை நோக்கினான்.

அவன் இருந்த இடத்தைச் சிவிகை தாண்டியபோது, தன்னை இரண்டு விசாலமான கரிய கண்கள் கூர்ந்து நோக்குவது போல் அவனுக்கு உணர்ச்சி உண்டாயிற்று. திரும்பிப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் அளவு மீறிப் பொங்கிற்று. பல்லைக் கடித்துக்கொண்டு அவன் வேறு திசையையே பார்த்துக்கொண்டிருந்தான். பல்லக்கு கொஞ்ச தூரம் முன்னால் போன பிறகுதான் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தான். பல்லக்கில் உட்கார்ந்திருந்த பெண் தன் மீது வைத்த கண்ணை எடுக்காமல் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டான். அடுத்த கணம் அவனுடைய கண்கள் மறுபடியும் கீழே நோக்கின.

ஆனால், பல்லக்கு மேலே போகவில்லை; நின்றுவிட்டது. பல்லக்குடன் போய்க்கொண்டிருந்த வீரர்களில் ஒருவன் இரத்தின வியாபாரியை நோக்கி வந்தான். அருகில் வந்ததும், ''அப்பா! தேவிக்கு உன்னிடம் ஏதோ கேட்க வேண்டுமாம்; கொஞ்சம் வந்துவிட்டுப்போ!'' என்றான்.

இரத்தின வியாபாரி அவனுடன் பல்லக்கை நோக்கிப் போனான். அந்தச்

சில வினாடி நேரத்துக்குள் அவனுடைய உள்ளத்தில் என்னவெல்லாமோ எண்ணங்கள் கொந்தளித்தன. 'இந்தப் பெண் யாராயிருக்கும்? எதற்காக நம்மை அழைக்கிறாள்? நம்மை அடையாளம் கண்டு கொண்டாளோ? அப்படியானால் இத்தனை நாளும் நம்மை ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்ததாக ஏற்படுகிறதே? இவள் உயர்குலத்துப் பெண் என்பதில் சந்தேகமில்லை. ஒரு வேளை சக்கரவர்த்தியின் மகளாகவே இருக்குமோ? ஐயோ! அவ்விதம் இருந்துவிட்டால்...!

இரத்தின வியாபாரி பல்லக்கை நெருங்கி வந்து அந்தப் பெண்ணின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். அப்பப்பா! அவளுடைய பார்வைதான் எவ்வளவு கூரியது? பெண்களின் கண்களை வாளுக்கும் வேலுக்கும் இதனால்தான் ஒப்பிடுகிறார்கள் போலும்!

ஆமாம்; குந்தவி அவனுடைய கண்களின் வழியாக அவனது இருதயத்தையே ஊடுருவி, அதன் இரகசியத்தைக் கண்டு பிடிக்க விரும்புகிறவளைப் போலேதான் பார்த்தாள். இவ்விதம் சற்றுநேரம் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, ''ஐயா! நீர் யார்? இந்தத் தேசத்து மனுஷர் இல்லை போலிருக்கிறதே?'' என்றாள்!

''ஆம் தேவி! நான் கடலுக்கப்பால் உள்ள செண்பகத்தீவில் வசிப்பவன். இரத்தின வியாபாரம் செய்வதற்காக இவ்விடம் வந்தேன். என் பெயர் தேவசேனன்'' என்று மளமளவென்று பாடம் ஒப்புவிக்கிறவனைப் போல் மறுமொழி கூறினான் இரத்தின் வியாபாரி.

அவனுடைய படபடப்பு குந்தவி தேவிக்கு வியப்பை அளித்திருக்க வேண்டும். மறுபடியும் சிறிது நேரம் மௌனமாக உற்றுப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, ''எந்தத் தீவு என்ற சொன்னீர்?'' என்றாள். ''செண்பகத் தீவு - செண்பகத் தீவு - செண்பகத் தீவு - கேட்ட ஞாபகமாய் இருக்கிறதே! அந்தத் தீவை ஆளும் அரசன் யாரோ?''

''செண்பகத் தீவின் பூர்வீக அரச வம்சம் நசித்துப் போயிற்று. சோழ நாட்டு இளவரசர் விக்கிரமர்தான் இப்போது எங்கள் அரசர்.''

இவ்விதம் சொன்னபோது குந்தவியின் முகத்தில் உண்டான பிரகாசத்தை இரத்தின வியாபாரி கவனிக்காமல் போகவில்லை. 'அந்தத் தேசப் பிரஷ்டனை இன்னும் இவள் நினைவு வைத்துக் கொண்டுதானிருக்கிறாள்! ஆனால், இவள் யார்? இவ்வளவு முகாந்தியும் சௌந்தரியமும் உள்ளவள் ஒரு வேளை...?' அத்தகைய சந்தேகமே இரத்தின வியாபாரிக்குத் திகில் உண்டாக்கிற்று.

அப்போது குந்தவி, ''நீர் இரத்தின வியாபாரி என்பதாகச் சொன்னீரல்லவா?'' என்று கேட்டாள்.

''ஆம், அம்மா; இதோ இந்தக் குள்ளன் தலையில் உள்ள மூட்டைகளில் மேன்மையான இரத்தினங்கள் இருக்கின்றன. வேணுமானால் இப்போது எடுத்துக் காட்டுகிறேன்.''

''இப்போது வேண்டாம், வீதியில்










கூட்டம் சேர்ந்து போகும். சாயங்காலம் அரண்மனைக்கு வாரும்'' என்றாள் குந்தவி.

அரண்மனை...! இந்த வார்த்தையைக் கேட்டதும் அந்த இளம் வர்த்தகனுடைய முகமானது அப்படி ஏன் சிணுங்குகிறது?



அந்தச் சிணுக்கத்தை குந்தவி கவனித்தாளோ, என்னவோ தெரியாது. எதையோ மறந்துபோய் நினைத்துக் கொண்டவள் போல், ''ஆமாம்; சாயங்காலம் கட்டாயம் அரண்மனைக்கு வாரும். சக்கரவர்த்தியின் குமாரி குந்தவி தேவிக்கு இரத்தினம் என்றால் ரொம்பவும் ஆசை. கட்டாயம் உம்மிடம் வாங்கிக்கொள்வாள். ஒருவேளை இந்த மூட்டையிலுள்ள இரத்தினங்கள் அவ்வளவையும் வாங்கிக்கொண்டாலும் வாங்கிக்கொள்ளலாம்'' என்றாள்.





இரத்தின வியாபாரி பெருமூச்சு விட்டான். மனத்திலிருந்த பெரிய பாரம் ஏதோ ஒன்று நீங்கியவன் போலத் தோன்றினான்.

''அப்படி எல்லாவற்றையும் ஒரே இடத்தில் விற்றுவிட வேண்டுமென்று ஆசை எனக்கில்லை. இந்தத் தேசத்தில் இன்னும் பல இடங்களையும் சுற்றிப் பார்க்க விரும்புகிறேன். உங்களுக்கு வேண்டிய இரத்தினங்களை நீங்கள் வாங்கிக் கொண்டால் போதும்'' என்றான்.



''அதற்கும் நீர் அரண்மனைக்குத்தான் வந்தாக வேண்டும். கட்டாயம் வருகிறீரா?''

''வருகிறேன்; ஆனால், அரண்மனைக்குள் வந்து யார் என்று கேட்கட்டும்?''



''குந்தவி தேவியின் தோழி மாதவி என்று கேட்டால் என்னிடம் அழைத்து வருவார்கள்.''

''தடை ஒன்றும் இராதே?''



''ஒரு தடையும் இராது. இருக்கட்டும், இப்படி நீர் இரத்தின மூட்டைகளைப் பகிரங்கமாக எடுத்துக்கொண்டு சுற்றுகிறீரே! திருடர் பயம் இல்லையா உமக்கு?''

''நன்றாகக் கேட்டீர்கள்! நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியின் ஆட்சியில் திருட்டுப் பயமும் உண்டா?'' என்றான் இரத்தின வியாபாரி.



    

குந்தவி புன்னகையுடன், ''அப்படியா? எங்கள் சக்கரவர்த்தியின் புகழ் அப்படிக் கடல்கடந்த தேசங்களில் எல்லாம் பரவியிருக்கிறதா? சந்தோஷம். நீர் சாயங்காலம் அவசியம் அரண்மனைக்கு வருகிறீர் அல்லவா?'' என்று கேட்டாள்.

''கட்டாயம் வருகிறேன்'' என்றான் வியாபாரி.

பிறகு, குந்தவியின் கட்டளையின்



பேரில் பல்லக்கு மேலே சென்றது, இரத்தின வியாபாரி நின்ற இடத்திலேயே நின்று பல்லக்கு ஜனக் கூட்டத்தில் மறையும் வரையில் அந்தத் திசையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்ன அப்பா? எத்தனை நேரம் ஒரே பக்கம் பார்ப்பாய்? கண்விழி பிதுங்கப் போகிறது'' என்று ஒரு கடூரமான குரலைக் கேட்டு, அந்த இளம் வர்த்தகன் திடீரென்று காலால் நெருப்பை மிதித்தவன் போல் துள்ளித் திரும்பிப் பார்த்தான். ஒரு கருநிறக் குதிரைமேல் சாக்ஷாத் மாரப்ப பூபதி அமர்ந்து, தன்னை ஏளனப் பார்வையுடன் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

## 3. மாரப்பன் புன்னகை

**வி**க்கிரமன் செண்பகத் தீவில் இருந்த காலத்தில் தாய் நாட்டையும், தாய் நாட்டில் உள்ளவர்களைப் பற்றியும் அடிக்கடி சிந்தனை செய்வான். அருள்மொழி, சிவனடியார், பொன்னன், வள்ளி, காஞ்சிநகர்ப் பெண் ஆகியவர்கள் அவனுடைய உள்ளத்தில் இடைவிடாமல் தோன்றுவார்கள். அவர்களுக்கிடையில், மாரப்ப பூபதியும் சில சமயம் அவனுடைய நினைவுக்கு வருவான். அப்போது விக்கிரமனுடைய உள்ளமும் உடலும் அருவருப்பினாலும் அவமானத்தினாலும் சுருங்கிப் போகும். சித்தப்பா தன்னை வஞ்சித்து நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டாரென்று, சிராப்பள்ளி மலையில் அவன் புலிக் கொடியை உயர்த்த முயன்ற அன்றைய தினமே வெளியாகிவிட்டது. அந்த முயற்சிக்கு மாரப்ப பூபதி பூரண உதவி செய்வதாய் வாக்களித்திருந்ததற்கு மாறாக, அவர் அச்சமயம் அருகில் வராமலே இருந்துவிட்டது மாத்திரமில்லை; அவரே முன்னதாகப் பல்லவ சேனாதிபதிக்குத் தகவல் தெரிவித்தவர் என்பதும், அவனைச் சிறைப்படுத்திக் காஞ்சிக்குக் கொண்டுபோன வீரர்களின் பேச்சிலிருந்து தெரிந்துவிட்டது.

ஆகையால், மாரப்ப பூபதியைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் விக்கிரமனுடைய உள்ளம் கசந்ததோடு, நாவும் கசந்தது. சோழ வம்சத்தில் இப்படிப்பட்ட மனிதர் ஒருவரும் பிறந்ததை எண்ணி எண்ணி அவன் மனம் குன்றினான்.

இவ்வாறு அவனுடைய அருவருப்புக்

கும் அவமான உணர்ச்சிக்கும் காரணமா யிருந்த மாரப்ப பூபதி, இப்போது சற்றும் எதிர்பாராத சமயத்தில், திடீரென்று எதிரில் நின்றதும், விக்கிரமனுக்கு எப்படியிருந்தி ருக்குமென்று சொல்லவும் வேண்டுமா?

இரத்தின வியாபாரியின் முகத்தில் தோன்றிய திகைப்பை மாரப்ப பூபதி கவனித்தவனாய், ''ஏனையா இப்படி மிரளுகிறீர்? ஏதோ திருடனைப் பற்றிப் பேச்சு நடந்ததே? ஒருவேளை நான்தான் திருடன் என்று நினைத்துக் கொண்டீரோ?'' என்று சொல்லி மீண்டும் ஏளனச் சிரிப்பு சிரித்தான்.

இதற்குள் விக்கிரமன், ஒருவாறு சமாளித்துக்கொண்டு விட்டான்.

''இந்த நாட்டுத் திருடர்கள் எப்படியி ருப்பார்கள் என்று எனக்குத் தெரியாது, ஐயா! நான் இந்த நாட்டான் அல்ல. ஆனால், நரசிம்ம சக்கரவர்த்தியின் ஆட்சி யில் திருட்டுப் புரட்டே கிடையாதென்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகையால், நீர் திருடராயிருக்க முடியாது'' என்றான்.

''அசலூர்க்காரனாயிருந்தாலும் அகம் பாவத்தில் மட்டும் குறைச்சல் இல்லை. நீர் எந்தத் தேசம், ஐயா? உமது பெயர் என்ன? எதற்காக இந்த நாட்டுக்கு வந்தி ருக்கிறீர்?'' என்று பூபதி கேட்டான்.

''உமக்குத் தெரிந்தேயாக வேண்டுமா னால் சொல்கிறேன். என் பெயர் தேவ சேனன்; இரத்தின வியாபாரம் செய்ய வந்திருக்கிறேன்.''

''ஓகோ! இரத்தின வியாபாரம் செய் வதற்கா வந்திருக்கிறீர்? அப்படியா சமா சாரம்? இரத்தின வியாபாரி ஒவ்வொரு கல்தச்சனாகக் கூப்பிட்டு எதற்காக இரகசி யம் பேச வேண்டும்? பல்லவ நாட்டி லிருந்து சிற்பிகளைக் கலைத்து அழைத்துப் போகிறவர்களுக்கு நரசிம்ம சக்கரவர்த்தி என்ன தண்டனை விதிப்பார் தெரியுமா?''

''எனக்குத் தெரியாது ஐயா! நான்தான் அயல் நாட்டான் என்றேனே? இவ்வளவு விசாரணை புரியும் நீர் யார் என்று எனக்குத் தெரியவில்லையே?''

மாரப்ப பூபதி கடகடவென்று சிரித் தான். ''நான் யார் என்று தெரியவில் லையா? நல்லது; வெண்ணாற்றங் கரைப் போர்க்களத்தில் உயிரைவிட்ட பார்த்திப மகாராஜாவுக்கு உடன் பிறந்த சகோதரன் நான்! தற்சமயம் சோழ நாட்டின் பிரதம சேனாதிபதி...!''

இப்படிச் சொல்லியபோது இரத்தின வியாபாரியின் முகத்தில் ஏதாவது மாறுதல் தெரிகிறதா என்று மாரப்பன் உற்றுப் பார்த்தான். ஒன்றும் தெரியாமல் போகவே, ''என்னுடைய கீர்த்தி உம்முடைய காதுக்கு எட்டி யிராவிட்டாலும், வீராதி வீரரும் சூராதி சூரருமான பார்த்திப மகாராஜாவின் புகழ் கண்டிப்பாக எட்டியிருக்க வேண்டுமே? அந்தப் பெயரைக்கூட நீர் கேட்டதில்லையா? அப்படி எந்தக் கண்காணாத தேசத்து மனுஷர் ஐயா நீர்?'' என்று கேட்டான்.

இரத்தின வியாபாரி சற்று யோசிப் பவன் போல் காணப்பட்டான். பிறகு, அவன் மாரப்பனை ஏறிட்டுப் பார்த்து, ''ஆமாம், பார்த்திப மகாராஜாவின் புகழை நிச்சயம் கேள்விப்பட்டிருக் கிறேன். அவருடைய புதல்வர் விக்கிர மர்தான் இப்போது எங்கள் செண்பகத் தீவுக்கு அரசர். நான் அவருடைய பிரஜை. ஆகையால், பார்த்திப மகாராஜா வைப் பற்றிக் கெடுதலாகவோ பரிகாச மாகவோ எதுவும் என் காது கேட்கச் சொல்ல வேண்டாம்!'' என்றான்.

மாரப்பனுடைய முகத்தில் இப் போது சிறிது திகைப்புக் காணப்பட்டது.

**''ஏனையா இப்படி மிரளுகிறீர்? ஏதோ திருடனைப் பற்றிப் பேச்சு நடந்ததே? ஒருவேளை நான்தான் திருடன் என்று நினைத்துக் கொண்டீரோ?''**



ஆயினும், அவன் உடனே சமாளித்துக் கொண்டு கூறினான்: "ஓஹோ! அவ்வளவு ராஜபக்தியுள்ள பிரஜையா நீர்? உம்முடைய முகத்தில் விழித்தாலே புண்ணியம் ஐயா! அதனால்தான் உம்மை விட்டுப் போகவே மனம் வரமாட்டேன் என்கிறது. ஆமாம், உமது பெயர் என்னவென்று சொன்னீர்?"

"தேவசேனன்."

"தேவசேனன் - ஆகா! என்ன திவ்யமான பெயர்! இவ்வுலகில் பெயர், புகழ் எல்லாம் பொய் என்று சொல்வது எவ்வளவு பிசகு? உம்முடைய பெயருக்காகவே உம்மிடம் இரத்தினம் வாங்கலாம். இருக்கட்டும்; கோமகள் குந்தவி தேவி இரத்தினம் வாங்குவதற்குத்தானே உம்மை அரண்மனைக்கு வரச் சொல்லியிருக்கிறார்கள்?"

"கோமகள் குந்தவி தேவியா? யாரைச் சொல்கிறீர்?" என்று இரத்தின வியாபாரி உண்மையான வியப்புடனே கேட்டான்.

"இப்போது பல்லக்கில் போனாளே, அந்தத் தேவியைத்தான்!"

"அவள் குந்தவி தேவியின் தோழி மாதவி அல்லவா?"

"ஓஹோ! உன்னிடம் அப்படி ஒரு பொய் சொல்லி வைத்தாளாக்கும். அப்பாவுக்கு ஏற்ற பெண்தான். நீ இந்தத் தேசத்து மனுஷன் அல்லவென்று நிச்சயமாய்த் தெரிகிறது அல்லது இந்தத் தேசத்தைவிட்டு வெளியேற்றப்பட்டவனாயிருக்க வேண்டும்..."

இந்த இடத்தில் மாரப்ப பூபதி தனக்குத்தானே பேசிக்கொண்டான். பிறகு திடீரென்று தேவசேனனை உற்றுப் பார்த்து, "ஆமாம்; உங்கள் தேசத்து ராஜா விக்கிரமன் என்று சொன்னீரே? அவனுடைய தாயார் அருள்மொழி ராணிக்கு நேர்ந்த விபத்தைப் பற்றி அவனுக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

இந்தக் கேள்வியினால் மாரப்ப பூபதி என்ன எதிர்பார்த்தானோ அது சித்தியாகிவிட்டது. இத்தனை நேரமும் மாறாமல், பதுமை போலிருந்த இரத்தின வியாபாரியின் முகம் மாறிவிட்டது. அளவில்லாத பீதியுடனும் ஆத்திரத்துடனும், "என்ன? அருள்மொழி ராணிக்கு என்ன?" என்று அவன் அலறிக்கொண்டு கேட்டான்.

மாரப்பன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

அதே சமயத்தில், அவர்களுக்குப் பின்னால் வெகுசமீபத்தில் ஒரு பெரும் கோலாகல கோஷம் எழுந்தது. "வாதாபியை அழித்து வாகை சூடிய நரசிம்ம பல்லவேந்திரர் வாழ்க!" "ஜய விஜயீ பவ!" என்று ஏக காலத்தில் அநேகம் குரல்களிலிருந்து வாழ்த்தொலிகள் கிளம்பி ஆரவாரித்தன. "சக்கரவர்த்தி வருகிறார். சக்கரவர்த்தி வருகிறார்" என்று பலர் பேசுவது காதில் விழுந்தது.

(தொடரும்)

"தேவசேனன் - ஆகா! என்ன திவ்யமான பெயர்! உம்முடைய பெயருக்காகவே உம்மிடம் இரத்தினம் வாங்கலாம்."

மோகன்

# காதல் வோட்டு!

பிள்ளை பிடிப்பவனைப் போல்
என்னைப் பிடித்துவிட்டாய்

சாத்தியமில்லைதான்
இனி தப்பிச் செல்வது

வாழ்க்கையின் விருந்தில்
கண்ணீரைக் குடித்தே
போதை ஏற்றிக்கொள்கிறது
காதல்
ஆனாலுமென்ன
காதல் இல்லாத இதயம்
பேய்களின் சத்திரம்

உன் சின்னத்தில்
என் காதல்
செல்லாத வோட்டு

அர்த்தம் நழுவுகிற
சொல் நான்
அகராதியில் எப்படி
ஏறுவது

துயரத்தின் தோட்டம்
இந்த வாழ்வு
நான்
கண்ணீர் இறைக்கப் பிறந்தேன்

# இதோ



'எனக்கு அடுத்து யார் என்பதை நான் உயிருடன் இருக்கும்போதே அறிவித்து விட விரும்புகிறேன். தேவையற்ற குழப்பங்களைத் தவிர்க்கவே இந்த முடிவு' - தலாய் லாமாவின் அறிவிப்பு இது. சரி, தலாய் லாமா எப்படித் தேர்ந்தெடுக்கப் படுகிறார்?

தலாய் லாமா என்பது போப் போன்ற ஒரு பதவி. தலாய் லாமாக்கள் மரணமடைவதில்லை; மறுபிறவி எடுக்கிறார்கள். ஆட்சியில் இருக்கும்போது ஒரு தலாய் லாமா இறந்துவிட்டால், அடுத்த தலாய் லாமாவைத் தேர்ந்தெடுப்பதற்குக் குறைந்தது பத்தொன்பது மாதங்கள் பிடிக்கும். காரணம், திபெத்திய நம்பிக்கைகளின்படி, இறந்துபோன ஒருவர் மறு பிறவி எடுப்பதற்கு இந்தக் கால இடைவெளி அவசியம். சரியாகப் பத்தொன்பது மாதங்கள் கழித்து, இறந்துபோனவரின் நினைவுகள் ஒரு குழந்தையைச் சென்றடையும். அந்தக் குழந்தைதான் அடுத்த தலாய் லாமா. அதாவது முந்தைய தலாய் லாமாவின் மற்றொரு பிறவி.

சரி, அந்தக் குழந்தை எந்தக் குழந்தை என்று எப்படிக் கண்டுபிடிப்பது? சில அடையாளங்கள் உண்டு. தவிரவும், சில சமிக்ஞைகள் கிடைக்கும். போ, நான்தான் அந்தக் குழந்தையின் உடலில் குடிகொண்டுள்ளேன். அந்தப் பாலகனை அரண்மனைக்குக் கொண்டு போ. அவரை வணங்கு. இப்படி ஒரு கட்டளை வரும். யாருக்கு? தாற்காலிகமாக நியமிக்கப்பட்டிருக்கும் லாமாவுக்கு. கட்டளை எப்படி வரும்? பொதுவாக, கனவில்; அல்லது ஏதாவது ஓர் அற்புத வழியில்.

தற்போதைய தலாய் லாமாவைத் தேர்ந்தெடுத்த கதை சுவாரஸ்யமானது. தாற்காலிக லாமாவுக்குச் சில காட்சிகள் தென்பட்டிருக்கின்றன. மூன்று மாடிகள் கொண்ட ஒரு புத்த மடாலயம். கூரை, பச்சை. அங்கிருந்து கிழக்கே ஒரு மலை. அதற்கு எதிரே ஒரு ஒற்றை மாடி வீடு. மாடியின் நிறம் நீலம்.

மலைமலையாக ஏறி - இறங்கியது தலாய் லாமாவைத் தேடும் குழு. எங்கே பச்சை? எங்கே மாடி? எங்கே குழந்தை? நீண்ட தேடலுக்குப் பிறகு, ஆம்டோ என்னும் பகுதியில் மேற்படி சமாசாரங்கள் பொருந்திய வீடு கண்டுபிடிக்கப்பட்டது.

மருதன்

# தலாய் லாமா

## உள்ளும் புறமும்

குழந்தை? கிட்டத்தட்ட ஒன்றரை மாதம் பகுதிபகுதியாக, வீடுவீடாகச் சென்று தேடினார்கள். ஆச்சரியப்படுத்தும்படி, அதிசயப்படும்படி ஒரு குழந்தையையும் காணோம். எல்லாம் கட்டைவிரலை வாய்க்குள் போட்டுச் சிரித்தபடி அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தன.

பிறகு, பன்னிரண்டு குழந்தைகளின் பெயர்கள் ஷார்ட் லிஸ்ட் செய்யப்பட்டன. பிறகு அதிலிருந்து வடிகட்டி இரண்டு பேர். முதல் குழந்தை இருந்தது டக்ஸே எனும் பகுதியில். கமர்கட் காட்டியோ, கொஞ்சியோ மிரட்டியோ உண்மையைக் கண்டுபிடிக்க முடியாது; சாதுர்யம் முக்கியம். ஆகவே, பயணிகள் போல் அவர்கள் மாறுவேடம் போட்டிருந்தார்கள்.

தற்செயலாக வீட்டுக்குள் நுழைவது போல் நுழைந்திருக்கிறார்கள். அம்மா தாயே, வீட்டில் யார் இருக்கிறீர்கள், கொஞ்சம் தண்ணீர் கிடைக்குமா? அப்படியே கண்களைச் சுழற்றிப் பார்த்திருக்கிறார்கள். ஆ... தூரத்தில் அந்தக் குழந்தை. குழுவின் தலைவர் கெட்சாங், தன்னை ஒரு வேலைக்காரனாக அறிமுகப்படுத்திக் கொண்டார். முட்டிக்கால் போட்டு உட்கார்ந்து குழந்தையிடம் பேச்சுக் கொடுத்தார். குழந்தை அவரை நெருங்கியது. அவர் கழுத்தில் அணிந்திருந்த மணியைத் தொட்டுக் காட்டியது. 'எனக்கு அது வேண்டும்'.

'நான் யார் என்று நீ கண்டுபிடித்துவிட்டால் இதை உனக்குத் தருகிறேன்'. மனத்தில் திக்திக். அந்தக் குழந்தை சிரித்திருக்கிறது. 'நீ சேராவைச் சார்ந்த லாமா' என்றது. கெட்சாங் நெகிழ்ச்சியுடன் குழந்தையின் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார்.

'குழந்தாய், இங்கே வா' என்றபடி பக்கத்து அறைக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே ஒரு மேஜையில் இரண்டு மாலைகள் வைக்கப்பட்டிருந்தன. ஒன்று, முந்தைய தலாய் லாமா பயன்படுத்திய நிஜ மாலை; மற்றொன்று போலி. இரண்டில் எது வேண்டும்? சரியானதை எடுத்து, தன் கழுத்தில் போட்டுக் கொண்டது குழந்தை.

அகம் மகிழ்ந்து போனார்கள். அடுத்து இரண்டு கைத்தடிகள். யோசித்துவிட்டு, முதல் கைத்தடியைக் கையில் எடுத்தது குழந்தை. அதிர்ந்துவிட்டார் கெட்சாங். 'ஐயோ, இது தவறான கைத்தடி ஆயிற்றே' பின்னர் விசாரித்தபோது, தலாய் லாமா இந்தக் கைத்தடியையும் சிறிது காலம் உபயோகித்தது தெரியவந்தது.

அடுத்து இரு மேளங்கள். தம் உதவியாளரை அழைக்க, இந்த மேளத்தில் ஒன்றை எடுத்து தலாய் லாமா முழங்குவது வழக்கம். இதை மட்டும் சரியாக எடுத்துவிட்டால், அந்தக் குழந்தைதான் தலாய் லாமா. பதைபதைக்கக் காத்திருந்தது அந்தக் குழு. ஒரு நிமிடம்கூடத் தாமதிக்கவில்லை அந்தக் குழந்தை. சரியான மேளத்தை எடுத்துச் சத்தம் எழுப்பத் தொடங்கியது.

தற்போதைய தலாய் லாமா அந்த அனுபவத்தை இப்படிப் பகிர்ந்துகொண்டார்: ''அந்தக் குழு எதற்காக வந்திருக்கிறது என்று அப்பொழுது என் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் தெரியாது. அவர்கள் தேடி வந்த தலாய் லாமா நானாக இருப்பேன் என்று அவர்கள் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை.''

இது கூகுள் காலம். ஆனால் என்ன? பண்டைய திபெத்திய நம்பிக்கைகளின் படியே அடுத்த குழந்தையை தலாய் லாமா தேர்ந்தெடுக்கப் போகிறார். ●



# அருள்வாக்கு

# ஆனந்தம்!

**நா**ய் என்ன பண்ணுமென்றால், அது ஒரு காய்ந்துபோன எலும்புத் துண்டைப் பார்த்தால், அதிலே என்றைக்கோ ஒட்டிக்கொண்டிருந்த மாமிச வாடை இருப்பதை முன்னிட்டு அதைப் போட்டுக் கடிக்க ஆரம்பிக்கும். நாய் ஆகாரம் பண்ணுவதற்கு அந்த எலும்பிலிருந்து ஒரு சத்தும் வராது. ஆனால், அது நாயின் வாயில் குத்தி இரத்தமே வெளிவர ஆரம்பிக்கும். அறிவில்லாமல் அந்த நாய் எலும்பிலிருந்தே இரத்தம் வருவதாக நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டு, அதை மேலும் மேலும் கடித்துத் தன் வாயை மேலும் மேலும் இரணமாக்கிக்கொண்டு, அதிலிருந்து வடிகிற தன் ரத்தத்தையே குடித்து ஆனந்தப்படும். இப்படித்தான் வெளி வஸ்துக்களின் அனுபோகத்தில் நாம் பெறும் ஆனந்தமென்பது அந்த வெளி வஸ்துக்கள் தருவதல்ல. நாயின் வாய் இரத்தம்போல நம் இந்த்ரியங்களிலேயே உள்ள ஆனந்தம்தான் அது. அந்த இரத்தமும் எங்கேயிருந்து வந்தது? நாயுடைய உயிரிலிருந்துதான். இம்மாதிரி இந்த்ரிய இன்பம் என்பதும் ஆத்மாவிலிருந்தே வருவதுதான். வெறுமே ஆத்மாவாக மட்டும் இருந்துகொண்டு அந்தப் பூர்ணானந்தத்தில் நிறைந்திருக்காமல், இந்த்ரியத்தினால் அதிலே துளிபாகம் பிரதிபலிக்கப்பட்டு, வெளிப்படுவதையே நாம் ஆனந்தம் என்று நினைக்கிறோம். அதுமட்டுமில்லாமல், இந்த ஆனந்தமும் இந்த்ரியங்களின் அனுபோகத்துக்கான விஷயங்களிலிருந்து வருவதாக வேறு நினைக்கிறோம்! ஆனந்தம் 'தன்னது'தான்; Subjective-தான். வெளி வஸ்துவிலிருந்து வரும் objective சமாசாரம் அல்ல. நிஜமான 'தானும்' ஆத்மாதானேயன்றி அந்தஃகரணமோ, இந்த்ரியங்களோ அல்ல.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்





# காந்தள் மலர் தரும் கலக்கல் வருவாய்!

முப்பது ஏக்கர் பரப்பளவில் பார் வைக்கு ரம்யமாக அமைந்திருக்கிறது, அந்தப் பூந்தோட்டம். கொள்ளை அழகில் பூக்கள். நாமக்கல்' மாவட்டம் சூரியம் பாளையத்திலிருக்கும் இந்தப் பூந்தோட் டத்தின் உரிமையாளர் கணேசன்.

''நான் சிறுவனா இருந்தப்ப என்னோட அப்பா, காசரளி என்கிற சுடுகாட்டு அரளி யோட விதைகள் மற்றும் வேர்களைத்தான் இத்தாலி நாட்டு INDENA என்கிற மருந்துக் கம்பெனிக்கு ஏற்றுமதி செஞ்சுக்கிட்டு இருந்தாரு. அப்புறம் அவுங்களே நேர்ல





இங்க வந்தாங்க. காசரளியைவிட வேறொண்ணு எங்களுக்கு அதிகமாத் தேவைப்படுது. அதனைப் பயிர் செஞ்சு, அதோட விதைகளை எங்களுக்கு அனுப்பி வையுங்கன்னு கேட்டுக்கிட்டாங்க. அது தாங்க இந்தக் காந்தள் மலர் விதைகள். தமிழக கிராமங்கள்ல இதனைக் கண் வலிப் பூவுனு சொல்லுவாங்க.

காட்டுப் பகுதிகளில் வேலிகள்ல படர்ந்திருந்த கண் வலிச் செடிகளின் காய்களைப் பறித்து வந்து, அதன் விதைகளை இத்தாலிக்கு அனுப்பி வெச்சாரு எங்க அப்பா. அவங்களுக்கு அதெல்லாம் பத்தலை. இன்னும் அதிகமா வேணும்னு எங்களை வேகப்படுத்தினாங்க. காடுகள்ல தானாவே முளைச்சுக் கிடந்த அந்தச் செடிகளோட கிழங்குகளை வெட்டி எடுத்து வந்த எங்க அப்பா, விதைக் கிழங்குகளா அதை மாத்தினாரு. முதன்முதலா அரை ஏக்கர் காட்டுல பயிரிட்டாரு. அமோகமா வளர்ந்துச்சு. நல்ல அறுவடை தந்தது.

நான் அப்போ பி.எஸ்சி. தாவரவியல் படிச்சிட்டு இருந்தேன். திடீர்னு ஒரு நாள் ஆக்சிடென்ட்ல அப்பா இறந்து போக, நான் படிப்பை பாதியில விட்டுட்டுத் தோட்டத்தைப் பார்த்துக்க வந்துட்டேன். இப்போ பதினைஞ்சு வருசமா இந்தச் சாகுபடியைச் செஞ்சுட்டு வர்றேன். மொத்தத்துல இருபத்தைஞ்சு வருஷமா இத்தாலி மருந்து கம்பெனிக்கு ஏற்றுமதி பண்ணிட்டு இருக்கோம்.

அரை ஏக்கர்ல ஆரம்பிச்ச விவசாயம், இப்போ ஐம்பது ஏக்கர்ல நடக்குது. ஒரு தடவை கிழங்கு நட்டா, தொடர்ந்து அஞ்சு வருஷத்துக்கு நல்ல பலன் கெடைக்கும். வருஷத்துக்கு ஏக்கருக்கு, ஐம்பதாயிரம் ரூபாய்க்கு மேலே லாபம் வருது.



* கணேசன்

இதன் மலர்கள் செடிகளில் பூத்துக் குலுங்கி காய்களாக மாறும். அந்தக் காய்களின் மேல் சருகு நிறம், பச்சையிலிருந்து மஞ்சளுக்கு மாறி வரும். அப்போது அந்தக் காய்களை அறுவடை செஞ்சு, அதனுள் இருக்கும் சிவப்பு வண்ண விதைகளைச் சேகரிப்போம். அந்த விதைகளில்தான் மருத்துவக் குணங்கள் நிறைந்துள்ளன.

இதன் விதைகளிலிருந்து தயாரிக்கப்படும் மருந்துகளை, இத்தாலியின் மிலன் நகரில் இயங்கி வரும் இன்டேனா (INDENA) மருந்து கம்பெனியினர் உலகம் முழுவதுமாக அனுப்பி வைக்கின்றனர். புற்றுநோய், முடக்குவாதம், மூட்டு வலி மற்றும் பாம்புக்கடி போன்ற மருந்துப் பொருட்களாக காந்தள் மலர் விதைகள் பயன்படுகின்றன. மற்றபடி கண் வலி மருந்துக்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இதன் மருந்துகள் கண் வலிக்கோ, காது வலிக்கோ பயன்படுவது கிடையாது. எப்படியோ தெரியல, தமிழ்நாட்டில் இதற்கு கண் வலிப் பூச்செடி என்கிற பெயர் மட்டும் நிலைத்துப் போய் விட்டது!'' என்கிறார் கணேசன்.

படம், செய்திச் சித்திரம்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

பெருகிவரும் மக்கள் தொகைக்கு ஏற்ப, பெருநகரங்கள் முதல் கிராமங்கள் வரை அடுக்குமாடிக் குடியிருப்பின் ஆதிக்கம் அதிகமாகவே இருக்கிறது. இதன் உரிமையாளர்கள் சங்கம் அமைத்துக் குடியிருப்பைப் பராமரிப்பது எப்படி? அந்தச் சங்கத்தின் செயல்பாடுகள் மற்றும் அதிகாரங்கள் என்னென்ன? இதோ சில தகவல்கள்...

● அடுக்குமாடி உரிமையாளர்கள் சங்கம் துவக்க வேண்டுமென்றால், குறைந்தது ஏழு உறுப்பினர்கள் இருக்க வேண்டும்.

● அனைவரும் ஒன்றாக அமர்ந்து, பொதுவான அறிக்கை (Memorandum) ஒன்றைத் தயார் செய்ய வேண்டும். அந்த அறிக்கையில் சங்கம் துவங்கப்படுவதன் நோக்கம், யார், யார் உறுப்பினர்கள், அவர்களது தொழில், முகவரி... என அனைத்து விவரங்களும் தெளிவாகக் குறிப்பிடப்பட வேண்டும்.

● அறிக்கையுடன், சங்கத்தின் விதிமுறைகள் என்ன என்பதையும் தீர்மானிக்க வேண்டும். அந்தத் தீர்மானத்தில், மிகத் தெளிவாக சங்கக் கூட்டம், எத்தனை நாட்களுக்கு ஒருமுறை நடக்கும் என்பதையும், பராமரிப்புச் செலவு, வங்கிகளுடன் கணக்கு வைத்துக் கொள்வது, அதை இயக்குவது, தவறு செய்யும் உரிமையாளர்கள் மீது நடவடிக்கை எடுப்பது என எல்லா விவரங்களும் இருக்க வேண்டும்.

● அறிக்கை மற்றும், விதிமுறைகளைத் தயார் செய்துகொண்டு, எல்லோரும் கையெழுத்துப் போட்ட ஒரு கடிதத்துடன், சங்கங்களின் பதிவாளரை (Registrar of Societies) அணுகி, பதிவு செய்ய வேண்டும். உறுப்பினர்கள் எந்தத் தேதியில் கூடி, அறிக்கையையும் விதிமுறைகளையும் இறுதியாக்கினார்கள் என்பதை கடிதத்தில் மறக்காமல் குறிப்பிட வேண்டும்.

● அடுக்குமாடி வளாகத்தில் மாடிப் படிகள், தாழ்வாரங்கள், பார்க்கிங் ஏரியாக்கள், புல்வெளிகள், குடிநீர், கழிவுநீர் கட்டுமானங்கள் மற்றும் இந்த இடங்களில் உள்ள மின் உபகரணங்கள், மதில் சுவர் ஆகிய இடங்கள் எல்லோருக்கும் பொதுவானவை.



● இவை தவிர, கட்டடங்களைத் தாங்கி நிற்கும் முக்கிய சுவர்கள், அஸ்திவாரம், கான்க்ரீட் தூண்கள், மேற்கூரை கான்க்ரீட் பீம்கள் ஆகியவை பொதுவான இடங்களின்கீழ்தான் வரும். இவை பொதுவான இடங்கள் என்று அறிவிக்கப்படுவதற்குக் காரணம், ஓர் உறுப்பினர் இந்தக் கட்டுமானங்கள் பாதிக்கும் அளவுக்குத் தம் குடியிருப்புக்குள் எந்தப் பழுதுபார்க்கும் பணியையும் மேற்கொள்ளக் கூடாது என்பதற்காகத்தான்.

● உரிமையாளருக்குப் பொருந்தும் விதிமுறைகள், வளாகத்தில் வாடகைக்குக் குடியிருப்பவருக்கும் பொருந்தும். உரிமையாளர்கள் குடியிருப்பை வாடகைக்கு விடும்போது சங்கத்துக்கு 'இன்னாருக்கு

வாடகைக்கு விட்டிருக்கிறேன்' என்று கடிதம் கொடுக்கவேண்டும். வாடகைக்கு இருப்பவர்கள் தவறுசெய்யும் போது, எச்சரிக்கைக் கடிதத்தை அவருக்குக் கொடுத்து, நகலை உரிமையாளருக்கும் அனுப்ப வேண்டும்.

● ஒவ்வொருவருக்கும் கார் பார்க்கிங் ஏரியாவை எப்படித் தீர்மானிப்பது? உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பிரிக்கப்படாத நிலத்தின் (undivided share) விகிதாச்சாரத்தில் மொத்த நிலத்தின் அடிப்படையில் பார்க்கிங் இடத்தைத் தீர்மானிக்கலாம்.



# அடுக்குமாடி உரிமையாளரா..? அட்டென்ஷன் ப்ளீஸ்!

● உரிமையாளருக்கு ஒரு காரை மட்டும் பார்க் செய்ய இடமிருக்கும் பட்சத்தில், அவர் தமது இரண்டு, மூன்று கார்களை வளாகத்தில் நிறுத்தி, மற்றவர் இடங்களை ஆக்கிரமித்தால், சங்க நிர்வாகிகளிடம் புகார் சொல்லித் தவறு செய்பவரைத் திருத்தவேண்டும்.

● பராமரிப்புச் செலவு (maintenance charges) மாதத்துக்கு எவ்வளவு ஆகும் என்பதை உத்தேசமாகக் கணக்கிட்டு, அதற்கு மேல் சங்கத்துக்குச் சேமிப்புக்காக இருபது சதத்தையும் கூட்டி, உறுப்பினர்களின் எண்ணிக்கையால் வகுத்துத் தீர்மானிக்கலாம். வளாகத்தில் பொது இடங்களில் சுண்ணாம்பு அடிப்பது, அவசியத்துக்கு ஏற்ப லாரியில் தண்ணீர் வாங்குவது என்று பல செலவுகள் வரும்போது சேமிப்பு கை கொடுக்கும். குடியிருப்பைக் காலியாக வைத்திருக்கும் உரிமையாளரும் பராமரிப்புச் செலவைக் கொடுக்கவேண்டும்.

● சங்கத்தின் முன் அனுமதி பெறாமல் வீட்டில் நடக்கும் விசேஷங்களுக்கு, பொது இடங்களை யாரும் பயன்படுத்தக் கூடாது. பராமரிப்புச் செலவு கொடுக்காதவர் மற்றும் தவறு செய்யும் உரிமையாளரைத் தட்டிக்கேட்க, சங்கம் சிவில் நீதிமன்றத்தை அணுகி நடவடிக்கை எடுக்கலாம்.

● சங்க நிர்வாகிகள் மாதாமாதம் கூட்டத்தைக் கூட்டி வரவு, செலவு அறிக்கையைத் தாக்கல் செய்ய வேண்டும். உறுப்பினர்கள் பதிவேடுகளைக் கேட்டால் தயங்காமல் காண்பிக்கவேண்டும். பிரமோட்டர் கொடுக்கும் தாய் பத்திரங்களைப் (parent deed) பாதுகாத்து வைத்துக் கொள்வதும் சங்கத்தின் பொறுப்பு.

– கௌசி

# ராசிபலன்

## தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். கூட்டாளிகளைப் பிரிய நேரிடும். குழந்தைகள் வழியில் சுப காரியம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். சிலருக்குக் குழந்தை பாக்கியம் கிட்டும். சனி / ராகு / கேது வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** பேச்சில் நிதானம் தேவை. வேலையில் இடமாற்றம் வரும். படிப்பில் கவனம் செலுத்தவும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் இருந்து வந்த மந்த நிலை மாறும். நண்பர்களால் அனுகூலம் ஏற்படும். சத்ரு தொல்லை இருக்கும். சனி / ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**மிதுனம்:** புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். தடை விலகி திருமணம் கைகூடும். சிலருக்கு மகப்பேறு பாக்கியம் கிட்டும். நண்பர், உறவினர்கள் மூலம் ஆதாயம் ஏற்படும். தெய்வ தரிசனம் கிட்டும். வேலையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. சத்ரு தொல்லைகள் விலகும். பரிகாரம் தேவையில்லை.

**கடகம்:** இல்லற வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனைத் தரும். மறைமுக எதிரிகள் இருப்பார்கள். கல்வியில் அக்கறை எடுத்துப் படிக்கவும். வாக்குவாதம் தவிர்க்கவும். வண்டி வாகனத்தில் செல்லும்போது உஷார். கொடுக்கல் வாங்கலில் அதிக கவனம் தேவை. புதிய முயற்சிகளைச் சற்று தள்ளிப்போடுவது நல்லது. சனி / ராகு / கேது / குரு வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும். மனசஞ்சலம் விலகும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். நீண்ட தூரப் பிரயாணம் [illegible] சேரும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். ஊதிய உயர்வு ஏற்படும். கொடுக்கல் வாங்கல் சீராகும். பணக் கஷ்டம் இருக்காது. சொத்து















# நடக்குமென்பார் நடக்கும்!

வாங்க நல்ல காலம். மகப்பேறு பாக்கியம் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** வேலையில் இடமாற்றம் உண்டாகும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். நண்பர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். வழக்கு வெற்றிப் பாதையில் செல்லும். வாகன யோகம் கிட்டும். சனி / குரு / வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** வியாபாரத்தில் அதிக லாபம் கிட்டும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேரும். வழக்கு வெற்றி பெறும். சுப காரியம் கைகூடும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர நற்பலன் ஏற்படும்.

**விருச்சிகம்:** வாக்குவன்மை மேலோங்கும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். தொழில் துறையில் மாற்றம் ஏற்படும். ஊதிய உயர்வு ஏற்படும். அயல்நாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** பண வரவு காத்திருக்கிறது. தெய்வப் பிரார்த்தனை நிறைவேறும். நீண்ட தூரப் பிரயாணம் செல்ல வேண்டி இருக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புதிய வேலை வாய்ப்புகள் வந்து சேரும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். குரு ப்ரீத்தி செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** எதிலும் கவனத்துடனும் நிதானத்துடனும் செயல்படவும். கணவன் - மனைவி அனுசரித்து நடந்துகொள்வது நல்லது. வேலையில் பளு அதிகரிக்கும். உடல் நிலையில் கவனம் தேவை. திருமணக் காரியம் தள்ளிப் போகும். வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வர சங்கடங்கள் குறைந்து நற்பலன் கூடும்.

**கும்பம்:** வருமானம் அதிகரிக்கும். கல்வி வளம் மேலோங்கும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். வேலையில் நற்பெயர் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. சனி / ராகு / கேது வழிபட்டு வந்தால் நன்மைகள் உண்டாகும்.

**மீனம்:** புதிய முயற்சிகள் நிறைவேறும். வேலையில் உயர்வு ஏற்படும். நீண்ட காலமாக முடிவு பெறாத வழக்குகள் வெற்றி பெறும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல காலம். சத்ரு தொல்லைகள் விலகும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

## 2.12.07 முதல் 8.12.07 வரை

# ரோபோ செய்யும்




ஒரு இருதய அறுவை சிகிச்சை நிபுணர் அந்த ரோபோ இயந்திரத்தை இயக்கிக்கொண்டிருக்க, அது நோயாளியின் மார்பில் கூறுபோட்டு, உள்ளே இதயத்தில் பழுதாகிப்போன வால்வை எடுத்துப் புதிதாக ஒன்றைப் பொறுத்தும் பணியைக் கச்சிதமாகச் செய்து முடிக்கிறது. இதுமட்டுமல்லாது, இருதய ரத்த நாளங்களில் பைபாஸ் அறுவை சிகிச்சையும் ரோபோ செய்துமுடிக்கிறது ரோபோ, என்றால் ஆச்சர்யமாக இருக்கிறதா? ரோபோ இருதய அறுவை சிகிச்சை செய்வது, சென்னை ஓ.எம்.ஆர். சாலையில் கேளம்பாக்கத்தில் அமைந்துள்ள செட்டிநாடு ஹெல்த் சிட்டியில் அமைந்துள்ள மருத்துவமனையில் தான். இந்த உயர் ரக, உலகத் தரம் வாய்ந்த மருத்துவ சிகிச்சை செய்ய அதிக செலவாகுமே. மனிதர்கள் செய்யும் ஆபரேஷனே அசந்தர்ப்பவசமாகத் தோல்வியில் முடியும்போது மெஷின் செய்தால் என்ன ஆகுமோ? என்று கலங்குபவர்களுக்குத் தக்க பதில் வைத்திருக்கிறார் ஹெல்த் சிட்டியின் தலைமை நிர்வாக அதிகாரி வெங்கட்.

''இதுபோன்ற ரோபோ இருதய அறுவை சிகிச்சைகள் டில்லி மற்றும் ஹைதராபாத் மருத்துவமனைகளில் நடக்கின்றன. சென்னையில் இப்போதுதான் முதல் முறையாக எங்களால் இது அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறது. நாற்பது கோடி செலவில் சிறப்பு உபகரணங்கள் இதற்காக வாங்கப்பட்டுள்ளன. ஆபரேஷன் சக்ஸஸ் ரேட்டைப் பொறுத்தமட்டில், பெரிய வித்தியாசமில்லை. அடுத்து மற்ற மருத்துவமனைகள் இதுபோன்ற அறுவை சிகிச்சைகளுக்கு வாங்கும் கட்டணத்தை விட, 25 சதவிகிதம் நாங்கள் குறைவாகத் தான் வாங்குகிறோம். 22 சென்டிமீட்டர் நீளத்தில் மார்பைத் திறந்து அறுவை சிகிச்சை செய்வதற்குப் பதிலாக, மூன்று சென்டிமீட்டரே திறந்து ரோபோ அறுவை சிகிச்சை செய்கிறது. இந்த வகை சிகிச்சையில் உலகிலேயே சிறந்த நிபுணரான டாக்டர் ரவிக்குமார் இங்கே பணிபுரிகிறார்'' என்கிறார் வெங்கட். இதுதவிர குழந்தையில்லா தம்பதிகளுக்குக் குழந்தை பாக்கியம் கிடைக்கும் வகையில் மிக நவீன சிகிச்சையும், ஆராய்ச்சிகளும் நடக்

# ஹார்ட் ஆப்ரேஷன்!

கின்றன. சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சையும் இங்கே நடக்கிறது.

சுமார் நூறு ஏக்கர் பரப்பளவில் அமைந்திருக்கும் இந்த ஹெல்த் சிட்டியின் ஆராய்ச்சி மையத்தில் ஐம்பத்து நான்கு பிரிவுகள் இருக்கின்றன. மருத்துவக் கல்லூரி, பல் மருத்துவக் கல்லூரி, நர்ஸிங் கல்லூரி, 1000 படுக்கைகள் கொண்ட மருத்துவமனை என்று முதல் கட்டம் முடிந்துவிட்டது. இரண்டாம் மற்றும் மூன்றாம் கட்டங்களில், மருத்துவச் சுற்றுலா, மருத்துவ ஆராய்ச்சி, சுகாதாரத் தகவல் தொழில்நுட்பம், மருத்துவ சாதனங்கள் உற்பத்தி என்று விஸ்தரிக்க இருக்கிறார்கள். 2009ல் எல்லா பணிகளும் முடிந்துவிடும். ஒரு நோயாளியைப் உள்ளே வந்துவிட்டால், வேறு எந்த உயர் சிகிச்சைக்கும் வெளியே போகவேண்டிய அவசியமில்லாத one time destination என்ற வகையில் இந்த ஹெல்த் சிட்டி இருக்குமாம். ஏ.டி.எம்., ஹோட்டல், இன்டர்நெட் வசதி மற்றும் முடிதிருத்தும் இடம் என்று சகல வசதிகளையும் ஏற்படுத்தி வைத்திருக்கிறார்கள்.

மருத்துவமனையின் பார்மஸியிலிருந்து குறிப்பிட்ட வார்டுக்கு மருந்து குப்பியை அனுப்ப வேண்டுமென்றால், Pneumatic Suit என்ற குழாயில் வைத்துவிட்டால், குப்பி சாலையைக் கடந்து, பல மாடிகளை தாண்டி குறிப்பிட்ட வார்டில் போய் தொம் மென்று சேதமில்லாமல் குதித்துவிடும்.

"எல்லா நவீன மருத்துவ வசதிகளும் நகரத்தில் இருப்பவர்களுக்குக் கிடைக்கும் வகையில்தானே இருக்கின்றன. கிராமப் புறங்களில் இத்தகைய ஹெல்த் சிட்டியை அமைத்திருக்கலாமே" என்று கேட்டால்,

"நீங்கள் கேட்பது நியாயமான கேள்விதான். ஆனால், இந்த ஹெல்த் சிட்டி இப்போது அமைந்திருக்கும் இடமே கிராமப் புறம்தானே. மேலும், இந்த சிட்டியுடன் இணைந்து செயல்படும் வகையில் இரண்டு கிராமப்புற சுகாதார மையங்களும் அமைத்திருக்கிறோம். அங்கு வருபவர்கள் கிராமத்து மக்கள்தான். தவிர, தமிழ்நாட்டில் உள்புறத்தில் இந்த ஹெல்த் சிட்டியை அமைத்தால், பல்வேறு பிரிவுகளில் அனுபவம் வாய்ந்த சிறப்பு மருத்துவ நிபுணர்கள், அந்தப் பகுதிக்கு வந்து தங்கி பணியாற்ற மிகவும் தயக்கம் காட்டுவார்கள். எதிர்காலத்தில் தமிழ்நாட்டில் எந்தப் பகுதியிலிருந்தும் விரைவாக இந்த சிட்டிக்கு எடுத்து வந்து சிகிச்சை கொடுக்கும் வகையில், ஹெலி ஆம்புலன்ஸ் சர்வீஸும் கொண்டு வரும் யோசனை இருக்கிறது" என்கிறார் வெங்கட்.

– ஆ.எஸ்.





# கணக்கு!

## பிரபஞ்சன்

ஆற்று மேடு வழி நடந்து, கானகம் போல அடர்ந்து செழித்த முதிய மரங்களோடு பேசியபடிதான் எப்போதும் ஊர் திரும்புவார் நடராசன். மரங்களுடன் பேசுவதா என்றால், ஆம்; பேசுவதுதான். அவர் பேச்சை மரங்கள் புரிந்துகொள்ளும்; அபத்தமாகப் பதில் ஏதும் பேசாது. அவற்றின் சிறார்ப்பருவம் முதல், அவர் அறிவார்.

அன்று ஏனோ, இலுப்பைத் தோப்பு வழியாக நடந்து, பாதையைப் பிடிப்போமே என்று அவருக்குத் தோன்றியது.

தோப்பின் மத்தியை அவர் கடந்த போது, நிழலும் இலேசான இருளும் கவிந்திருந்த ஓர் இடத்தில், வித்தியாசமான ஒரு சப்தம் அவருக்கு எட்டியது. கூர்ந்து அவதானித்ததில், அழுக்குத் துணிமூட்டை அசைவது போல ஒரு பெண் வேதனைக் குரல் எழுப்பியதைப் பார்த்தார். அவளுக்கு வயிறு பெருத்திருந்தது; சூலி. மண்ணைச் சற்று நேரத்தில் காணத் துடிக்கும் ஒரு ஜீவனின் போராட்டம்.

பதறிப்போன நடராசன் அவளைத் தூக்கித் தாங்கிப் பிடித்துப் பாதைக்கு அழைத்து வந்தார். ஊர்ப்பக்கம் போகிற மாட்டு வண்டி ஒன்று சரியாக அந்தப் பக்கம் வந்து சேர்ந்தது. வண்டியில் ஏற்றி, பெண்ணைத் தம் வீடு கொண்டுவந்து சேர்த்தார். அவர் குடும்பத்துக்கு மருத்துவம் பார்த்த தாயம்மாளைத் தேடி ஓடினார். நல்லவேளை அந்த அம்மாள் வீட்டில் இருந்ததால் உடனே கிளம்பினாள். சுகப் பிரசவம்தான் ஆயிற்று. பெண் குழந்தை.

பழைய நாட்டு ஓடு வேய்ந்த தம் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்தார் நடராசன். இந்த வீட்டில் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு ஜனனம் எடுத்திருக்கும் புது ஜீவனம். அவரது ஒற்றை மகள் உண்ணாமலை இந்த வீட்டில்தான் பிறந்தாள். அவர் மனைவி தங்கம்மாவுக்கு உண்ணாமலையைத் தம் தம்பிக்குக் கல்யாணம் பண்ணித் தர ஆசை. உண்ணாமலை, ஊரில் சூரசம்ஹாரம் நடந்துகொண்டிருந்த ஓர் இரவு நேரத்தில் காணாமல் போனாள். அவளுக்குப் பிடித்த யாரோ ஒருத்தனுடன், அவள் உடன் போயிருக்கலாம் என்று எல்லோரும் சொன்னார்கள். அப்படியிருந்தால் சந்தோஷம்தான் என்று நினைத்துக் கொண்டார் நடராசன். சரியாக தொண்ணூறு நாட்களுக்கு முன்தான் அவர் மனைவி காலமாகிப் போனாள். இப்போது அதே வீட்டில் ஒரு புதிய ஜனனம்.

தெருவுக்கு இலேசாக விழிப்பு தட்டி, ஜனங்கள் தங்கள் நடமாட்டத்தைத் தொடங்கி இருந்தார்கள்.

தம் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்தார் நடராசனை, கதவைத் திறந்தவுடன் பாய்ந்து ஓடும் ஒரு திருட்டுப் பூனையைப் போல, கடந்து வீட்டுக்குள் நுழைந்தாள் நடராசனின் மாமியார் சுப்பம்மாள். போன வேகத்தில் தெருவுக்கு வந்தவள், நடுத் தெருவில் நின்றுகொண்டு கூவத் தொடங்கினாள்.

''எத்தனை நாளாய் இந்தத் திருட்டுத் தனம். என் மகளை விஷம் வெச்சுக் கொன்னுப்புட்டு வைப்பாட்டியை வீட்டுக்கே அழைச்சிட்டு வந்து பிரசவமும் பாக்குறீயா? நீ நிக்கற இடத்தில் நிழலும் நிக்காது. வாந்தி, பேதி, வைசூரி நோய் வந்து நீ அனாதையாய் செத்துப் போவ... பேச்சுக்குப் பிறகு, தெரு மண்ணை வாரி

அவர் பக்கம் வீசினாள். கடைசியாகப் பஞ்சாயத்தில் அவரை நிறுத்துவதாகச் சொல்லிச் சென்றாள்.

ஒரு நாடகக் காட்சியைப் போல இவற்றைப் பார்த்துக்கொண்டிருந்தார் நடராசன். அவர் மனைவியின் தாய் தெருவில் நின்று அவரைத் திட்டிக்கொண்டிருந்த போது, அவள் பயன்படுத்திய அதிக வார்த்தைகள், அவரைக் கிறுக்கன் என்பதாக இருந்தது. கிறுக்கன் என்று எல்லோரும் நம்பும்படியாகவே அவர் காரியங்கள் ஆற்றி இருந்தார். 'எங்காவது அரசாங்க வேலையை வேணாம்னு சொல்லுவானோ ஒரு மனுஷன்... கிறுக்கு... கிறுக்கு... கிறுக்குப் பிடிச்சப் பாயைப் பிறாண்டறியே' என்றாள் அவள்.



விழிப்புணர்வுக் கதை - 5

அந்த ஊரிலேயே பெரிய படிப்பாளி என்றும் வக்கீல் என்றும் அறியப்பட்ட அந்தப் பெரிய மனிதரை, போலீஸ் காரப் பையன் ஒருவன் காலால் உதைத்ததை அவர் கண்ணில் கண்டார். வாழைக் குருத்து மாதிரி சின்னஞ்சிறு பையன்கள் பள்ளியை, கல்லூரியைப் புறக்கணித்துத் தெருவுக்கு வந்ததை அவர் பார்க்க நேர்ந்தது. ஒரு மதிய நேரம். தாசில்தார் அலுவலகத்தில் ஒதுக்கப்பட்டிருந்த தம் பழைய மேசைக்குப் பின் அவர் அமர்ந்து வேலை பார்த்துக்கொண்டிருந்தார். மேசை மேல் பேனா சிந்திய எண்ணற்ற மைப் புள்ளிகள் அவருக்கு இரத்தமாகத் தெரிந்தன. யாரின் ரத்தம்? மானத்தோடு வாழ்ந்த நெசவாளிகள், கஞ்சித் தொட்டிகளில் இருந்து இரந்து பெற்ற கஞ்சித் தண்ணீரில் சிந்திய இரத்தப் புள்ளிகள். ஏதோ நில விவகாரத்துக்காக உதவி நாடி வந்த ஒரு ஏழை விவசாயியை மிரட்டிப் பறித்த பணத்தில் வாங்கிய தாளில், எழுது பேனாவைக் கொண்டு அவர் நாலு வரி எழுதினார். செத்த எலியை எடுத்துக் கொண்டு போவதாகப் போய் தாசில்தார் முன் மேசைமேல் வைத்தார்.

வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார் தாசில்தார்.

''என்ன இது?'' என்றார்.

''ராஜினாமா கடிதம்.''

''யாருடையது?''

''என்னுடையது.''

''சாப்பாட்டுக்கு என்ன செய்யப் போறீர்?''

''சோறு இல்லாமல் யாரும் சாவது இல்லை.''

**யோ**சிக்கையில், மாமியார் சுப்பம்மாள் அத்தனை ஆங்காரத்துடன் வீட்டு வாசலில் நின்று கத்தியதைத் தப்பு என்று சொல்ல முடியாது என்று நடேசன் நினைத்தார். இப்படியாகச் சிந்தித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தவரை பராங்குசம் பூமிக்குக் கொண்டு வந்தார். நடேசனின் மைத்துனர்தான் பராங்குசம்.

''மாமா... அந்த மூடம் பஞ்சாயத்தைக் கூட்டிருக்குது. நீங்க வரவேண்டாமா? உங்களைப் போயிப் பஞ்சாயத்துல நிக்க வெச்சுட்டுதே. நான் ஆன மட்டும் சொன்னேன்; கேக்கலை. நான் எப்பவும் உங்க பக்கம்தான். நீங்க செய்யறது எப்பவும் சரியாத்தான் இருக்கும்; வாங்க.''



நடராசன் எழுந்து சட்டையைப் போட்டுக்கொண்டு புறப்பட்டார். பஞ்சாயத்தார்கள் அரசமர மேடையில் அமர்ந்திருந்தார்கள். யாராக இருந்தாலும் பஞ்சாயத்தில் நிற்க வேண்டும் என்ற நியதிக்கேற்ப நடராசன், அவர் மாமியார் சுப்பம்மாள் ஆகிய பிரதிவாதியும் வாதியும் எதிர் எதிராக நின்றார்கள்.

சுப்பம்மாள், தன் நியாயத்தைச் சொன்னாள்.

''ஐயா... என் பொண்ணு போய்ச் சேர்ந்துட்டா. அந்த மனுஷன் வேற ஒருத்தியைச் சேர்த்துக்கிட்டாரு...'' என்ற போது பஞ்சாயத்தார் இடைமறித்தார்கள்.

''தோ பார்... அந்தப் பெண், குளி குளிச்சிக் கிடக்குது. நான் அந்தப் பொம்பிளைகிட்ட பேசிட்டேன். 'எனக்கும் அந்தப் பெரியவருக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை' அப்படீன்னு தெளிவாச் சொல்லிடுச்சு. உன் மருமவனும் அப்படிப் பட்ட மனுஷன் இல்லை. வேற பேசு...''

அந்தப் பெண்மணி கத்திக் கத்தி வந்து, கடைசியாக, ''நடராசன் குடியிருக்கும் வீடு, தன் பெண் பேரில் இருக்கிறது. அது

**பு**திய இயக்குநர்களுக்கு வாசலாக எப்போதுமிருக்கும் நிறுவனம், சத்யஜோதி ஃபிலிம்ஸ். மணிரத்னத்தை 'பகல் நிலவு' படம் மூலம் டைரக்டராக்கியவர்கள், இப்போது அவரின் உதவியாளர் ஆர்.கண்ணனை 'ஜெயம்கொண்டான்' படம் மூலம் இயக்குநராக அறிமுகப்படுத்துகிறார்கள்.

''இது ஒரு முக்கோணக் கதை. காதல் கதையான்னு கேட்டா, ஆமான்னும் சொல்லலாம். என் குருநாதர்கிட்ட நான் கத்துக்கிட்ட விஷயங்கள் நிறைய. ஆனா, எனக்கென ஒரு தனி பாணி வகுத்துப்பேன். என்னை, என் ஸ்கிரிப்டை நம்பி ஏத்துக்கிட்ட சத்ய ஜோதி நிறுவனத்துக்கு இந்தப் பட வெற்றியைத்தான் காணிக்கையா தரப் போறேன். புதிய முகங்களைத் துணிந்து திரையுலகத்துக்குத் தர்ற தியாகராஜன் சார் மாதிரியான தயாரிப்பாளர்கள்தான் இன்றைக்குத் தேவை. வினய்க்கு இது ரெண்டாவது படம். முதல் படத்துல பார்த்தவரை இதுல பார்க்க முடியாது. 'அவரா இது'ன்னு நிச்சயம் ஆச்சர்யப் படப் போறீங்க. யதார்த்தத்துக்கு பாவனா; இன்னொரு பொண்ணு லேகா. நல்ல படத்தை என்னிக்கு ஏமாத்தியிருக்காங்க ரசிகர்கள்?'' டைரக்டர் கண்ணன் சொல்வது மெய்ப்படட்டும்.

– **ரேவதி**

எனக்கு வேணும்'' என்றாள்.

பராங்குசம் தலையிட்டார்.

''பெரியவங்களுக்குச் சொல்லிக்கறேன். நடராசன் மாமா கல்யாணத்தை முன்னால் நின்று நடத்தியதே நான்தான். மாப்பிள்ளை சீர், வரதட்சணை என்று ஒரு பைசா அவரும் கேக்கலை. நாங்களும் கொடுக்கலை. கொடுக்க எங்களுக்கு வக்கும் இல்லை. என் தங்கை மகள் வேலைக்குப் போனவள் இல்லை. செத்துப்போனவளுக்கு, மாமா எவ்வளவு பணம் செலவழிச்சு, பட்டணத்துக்குக் கொண்டு போய் வைத்தியம் பார்த்தார்னு எனக்குத் தெரியும். பாவச் சொத்து குடும்பத்தைப் பலி வாங்கிடும்.

தாய் மாமன் இப்படிச் சொல்லும் போது, ''வீடு மற்றும் எந்த உரிமையையும் சுப்பம்மா கோர முடியாது'' என்றார்கள் பஞ்சாயத்தார்.

நடேசன் பஞ்சாயத்தாரிடம் சொன்னார்:

''பஞ்சாயத்தார் தீர்ப்புக்குத் தலை வணங்கறேன். முப்பத்தி மூணு வருஷம் என் மனைவி இருந்து வாழ்ந்த வீட்டில் அவளுக்குப் பங்கில்லைங்கறது, தர்மம் இல்லை. அவ புழங்கின அந்த வீட்டுல, அவ வாசனை இருக்கு. அதுக்கு மேல பாத்யதை வேறு என்ன இருக்குங்க. அந்த வீட்டை என் மாமியாருக்கே கொடுத்துடறேன். எழுதியும், பதிவு பண்ணியும் தர்றேன். எனக்கும் எங்கேயாவது போகணும்னு இருக்கு. தெற்கு, வடக்கு, கிழக்கு மேற்குன்னு எல்லாத் திசையிலயும் நடந்தே அலையணும்னு இருக்கு!''

**அ**வசியமான சில சாமான்களை மட்டும் வண்டியில் ஏற்றியாகிவிட்டது. குழந்தையைப் பெற்ற பெண்ணும் வண்டியில் ஏறி அமர்ந்தாள்.

மைத்துனரிடம் சொல்லிக் கொண்டார் நடராசன், ''போயிட்டு வர்றேன் பராங்குசம். நல்லா இரு...!''

''சரிங்க மாமா. உங்க முடிவை மாத்த முடியாது. எல்லாத்தையும் விட்டுட்டுப் போகணும்னு நினைச்சீங்க. இப்போ, சுமையோடு போகும்படி ஆயிடுச்சு!''

நடராசன் திரும்பி அந்தப் பெண்ணைப் பார்த்தார். அவள் கண்களைத் துடைத்துக்கொண்டிருந்தாள்.

'பொறுப்புன்னு வெச்சுக்கிடுவமே.. அவளை அசல்னு எதுக்கு நினைக்கணும்? நம்ம பொண்ணுன்னு நினைச்சுக்குவமே... நான் ஒரு கணக்குப் போட்டேன். நம்ம கணக்கு பல சமயம் தப்பாத்தான் போவுது.'

வண்டி புறப்பட்டது. வண்டி கண்ணுக்கு மறையும் வரை பார்த்தபடி நின்றிருந்தார் பராங்குசம். ●

**• ஜியாமெட்ரி பாக்ஸ் இல்லாமலே...**



# 70 முதல் 7 வரை....

**கௌ**ரி (ஆனந்தியின் மகள்) போன் செய்தாள். தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்து பரிமாறிக்கொண்டோம்.

சிவகாமியின் சபதத்திலிருந்து ஒரு பகுதியை எடுத்துக்கொண்டு மகேந்திர பல்லவரை மையமாக்கி, தனது கற்பனையையும் கலந்து, 'Flame of the Forest' என்ற தலைப்பில் ஆங்கில நாடகம் உருவாக்கி, அரங்கேற்றத்துக்கு ஒத்திகை பார்த்து வருவதாகச் சொன்னாள் கௌரி. ஏற்கெனவே சில ஆங்கில நாடகங்களை அரங்கேற்றியிருக்கிறாள். அவை அவளை ஒரு சிறந்த நாடகாசிரியராக மட்டுமின்றி சிறந்த இயக்குனராகவும் இனம்காட்டி வருகின்றன.

''சிவகாமியின் சபதத்தைப் படிக்கப் படிக்க புதுப்புது அர்த்தங்கள் கிடைக்கின்றன. புதுப்புது சிந்தனைகள் உருவாகின்றன. பேரிலக்கியம் என்பதற்கு இதுதானே அடையாளம்! ராஜா மாமா, நீங்க ரொம்ப அதிர்ஷ்டசாலி! இப்படிப்பட்டவரின் மகனாகப் பிறந்து, அவர் பின்னோடேயே இருந்து நெருங்கிப் பழகியிருக்கேளே!'' என்றாள்.

''அவர் கதைகளை மொழிபெயர்த்து புத்தமாக வெளியிட்டிருக்கிறாய்; அவர் கதைகளை ஆங்கில நாடகங்களாக்கி அரங்கேற்றுகிறாய்; நீயும் அதிர்ஷ்டசாலிதான். அமெரிக்கப் பல்கலைக்கழகத்தில் சிவகாமியின் சபதத்தை ஆராய்ந்து, டாக்டர் பட்டம் பெற்றுள்ள உன் மகள் அகிலாவும் அதிர்ஷ்டசாலிதான். அவர் எழுத்துக்களை ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுள்ள வேறு பலரும் கல்கியின் ரசிகர்கள் எல்லோருமே அதிர்ஷ்டசாலிகள்தான்'' என்று பட்டியலிட்டேன்.

சற்று யோசித்துப் பார்த்தால் 'கல்கி' அவர்களும் அதிர்ஷ்டசாலிதான்! ஒரு டி.கே.சி.யைத் தமது எழுத்தின் ரசிகராகவும், ஒரு ராஜாஜியைத் தமது தலைவராகவும், ஒரு சதாசிவம் - எம்.எஸ். தம்பதியை உற்ற நண்பர்களாகவும் பெற்றது கல்கியின் அதிர்ஷ்டம்தானே! ஒரு நட்சத்திரத்தின் ஐந்து முனைகளாக இவர்கள் பிரகாசித்தார்கள். தமிழ் நாட்டில் ஒரு பொற்காலத்தைத் தோற்றுவித்தார்கள்.

**க**ல்கியின் சரித்திரக் கதைகள், நீலகண்ட சாஸ்திரியையும் சதாசிவ பண்டாரத்தாரையும் படித்துவிட்டுக் கற்பனை கலந்து எழுதப்பட்டவை மட்டும் அல்ல; அவற்றில் கல்கியின் தேசபக்தியும், நமது தொன்மையான கலைகளில் அவருக்கு இருந்த ஈடுபாடும் பெருமிதமும், அந்தப் பெருமிதத்தை ஒவ்வொரு தமிழனும் அடைய வேண்டும் என்ற ஆர்வமும் பளிச்சிடும்.

நம் நாடு விடுதலை பெறவேண்டும்

என்று ஒவ்வொரு காங்கிரஸ் தொண்டனும் கண்ட கனவுதான் 'பார்த்திபன் கனவு.'

மாமல்லர் பெரும்படை திரட்டி வந்து வாதாபி தகனம் செய்து தன்னை விடுவிக்க வேண்டும் என்று சபதம் செய்த சிவகாமி, பின்னால் போரை நிறுத்துமாறு பரஞ்சோதிக்கு ஓலை அனுப்பினாள் எனில், அது உலக மகாயுத்தத்தின் விளைவாக எழுந்த மரண ஓலங்கள் கல்கியின் உள்ளத்தைப் பாதித்ததன் எதிரொலிதான்.

இதன் விளைவாகத்தான் கல்கியின் உள்ளத்தில் ஆயனச் சிற்பி உருவாகிறார். 'மஹாபலிபுரம்' கல்கியின் எழுத்து மூலமாக 'மாமல்லபுரம்' என்று திருத்தப் பெற்றது.

அதே டி.கே.சி. தான் பாலசரஸ்வதியின் நடனத்தை தெய்வமாக் கலை என்று கல்கிக்கு உணர்த்துகிறார். இருவரும் சேர்ந்து ருக்மிணிதேவியின் நடனத்தை ரசித்துப் பார்க்கிறார்கள். இந்த அனுபவங்

# ரசிகமணி



* மகாவிஷ்ணு, ருக்மிணி அம்மாள் தயாரித்த மோரை ருசிப்பார்த்தாரென்றால், பாற்கடலைத் துறந்துவிட்டு இந்த மோர்க் கடலில் பள்ளிகொள்வார்.

**'கல்சரர்' என்ற ஆங்கிலப் பதத்துக்கு 'பண்பாடு' என்ற தமிழ்ச் சொல்லை உருவாக்கித் தந்ததே டி.கே.சி.தான்**

மஹாபலிபுரம் கடற்கரை மணற் பரப்பில் கல்கியும் டி.கே.சி.யும் அமர்ந்திருக்கிறார்கள்.

''விதியின் எழுத்தைக் கிழிச்சாச்சு - முன்பு
விட்டகுறையும் வந்து தொட்டாச்சு.''

என்று ரசிகமணி தமக்கே உரிய சந்தத்துடன் பாவபூர்வமாகப் பாடுகிறார்.

கள் இல்லையெனில் சிவகாமி என்ற கதாபாத்திரம் உருவாகியிருக்குமா? சந்தேகம்தான்!

இன்னும் எத்தனையோ விதங்களில் டி.கே.சி.யின் ஆளுமை கல்கியின் எழுத்தைப் பண்படுத்தியது.

**டி**.கே.சி.யின் ரசனை, மாமல்லபுரச்



* கௌரி

சிற்பங்கள், பாலசரஸ்வதியின் நடனம், எம்.எஸ்.ஸின் பாட்டு, கம்பன் கவிதைகள்... என்பது போன்ற உன்னத நிலைகளில் மட்டுமே உலவி வருவதல்ல. வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்தையும், ஒவ்வொரு நிகழ்வையும் அவர் ரசனையோடு அணுகினார் என்பதுதான் ஆச்சர்யம். அதைக் காட்டிலும் சிறப்பு மற்றவர்களையும் அந்த ரசனையில் ஈடுபடச் செய்தார் என்பது.

தோட்டத்து மலர்களை ரசித்தவர், குற்றாலத்து மலைகளையும் அருவிகளையும் ரசித்தார்; சாரலை ரசித்தார். (குற்றாலத்துச் சாரல் என்பது துமிகள் என்று கூறத்தக்க அளவில் பொடிசான மழைத் தூறல்.)

சென்னையில் எங்கள் வீட்டு வாசலில் என் தாயார் போட்ட கோலத்தை ரசித்தார் : எனக்கு டியூஷன் சொல்லித்தர வந்த எஸ்.கே.ராமச்சந்திர அய்யரிடம், "இதைப் பார்த்தீங்களா, ருக்மிணி அம்மாவிடம் ஜியாமெட்ரி பாக்ஸ் கிடையாது, தெரியுமில்ல? ஸெட் ஸ்குயர், ஸ்கேல், காம்பஸ் எதுவும் அவங்களுக்குத் தெரியாது! ஆனாலும், இதிலே ஒரு ஜியாமெட்ரிகல் பாட்டர்ன் இருக்கு பார்த்தீங்களா? உங்களால ஜியாமெட்ரிபாக்ஸ் உதவி இருந்தும் இப்படி ஒரு *கோலம் போட முடியுமா?" என்று கேட்டார். எஸ்.கே.ஆர்., அவருடைய ஆவேச ரசனையிலேயே வெலவெலத்துப் போய்விட்டார்!

டயபெடிஸ் காரணமாக டி.கே.சி.க்கு உணவுப் பத்தியம் உண்டு. கேழ்வரகுக் கூழில் மோர் விட்டுச் சாப்பிடுவார். சென்னையில் எங்கள் இல்லத்தில் அவர் தங்கியிருந்த சமயம்; சாப்பாட்டு வேளை. திடீரென்று டி.கே.சி., "மகாவிஷ்ணு பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கிறார் ஏன் தெரியுமா?" என்று கேட்டார்.

பந்தியில் அமர்ந்திருந்த அனைவரும் திகைத்தனர்.

டி.கே.சி. தொடர்ந்தார்: "ஏனென்றால், மகாவிஷ்ணு ருக்மிணி அம்மாள் தயாரித்த மோரை ருசி பார்த்தது கிடையாது. இந்த மோரை அவர் அருந்தியிருந்தால் பாற்கடலைத் துறந்துவிட்டு, இந்த மோர்க் கடலில்தான் பள்ளிகொள்ளச் சம்மதித்திருப்பார்!"

டி.கே.சி. என்ற மூன்று எழுத்துக்களும் டி.கே.சிதம்பரநாத முதலியார் என்ற அவருடைய பெயரில் உள்ள முதல் மூன்று ஆங்கில எழுத்துக்கள். நான் எண்ணுவதுண்டு; T என்பது Tamil; K என்பது Kindness; C என்பது Culture.

'கல்சர்' என்ற ஆங்கிலப் பதத்துக்கு 'பண்பாடு' என்ற தமிழ்ச் சொல்லை உருவாக்கித் தந்ததே அவர்தான்.

இந்த முப்பரிமாணத்துக்கு எடுத்துக்காட்டாக, எங்கள் அனுபவத்திலிருந்தே முப்பதுக்கு மேற்பட்ட நிகழ்ச்சிகளைக் கூற முடியும். அவற்றுள் சிலவற்றையேனும் பின்னால் வரும் அத்தியாயங்களில் பார்க்கலாம்.

(பேசுவோம்)

---

* குனிந்து கோலம் போடமுடியாத அளவுக்கு மூப்படைந்த பிறகு, என் தாயார் வெள்ளைத்தாளில் பால் பாயிண்ட் பேனா உதவியுடன் கோலங்கள் போட ஆரம்பித்தார். அவை தொகுக்கப்பட்டுப் பின்னால் புத்தக உருப்பெற்றன.



# "உண்மையிலேயே கிருஷ்ணாதானா?"



சமீபத்தில், பகவான் சத்ய சாய்பாபா முன்னிலையில் பாடிவிட்டு வந்திருக்கிறார் டி.எம்.கிருஷ்ணா. அந்த அனுபவத்தை நம்மோடு பகிர்ந்து கொண்டார்:

"நவம்பர் - 21, பாபா பிறந்த நாள். அவர் முன்னால் பாட முடியுமா, ஃப்ரீயாக இருக்கிறீர்களா? என்று தொழிலதிபர் மல்லிகா சீனிவாசன் கேட்டார். நிகழ்ச்சியை முடித்துவிட்டு அன்றே திரும்பிவிடலாம் என்றார் மல்லிகா. 20 ஆம் தேதி புறப்பட்டு, மறுநாள் அதிகாலை மூன்று மணிக்குப் புட்டபர்த்தியை அடைந்தோம். என்னுடன் வயலின் ஸ்ரீராம்குமாரும், மிருதங்கம் மனோஜ் சிவாவும், தம்புராவுக்கு என் சிஷ்யன் ரவிகிரணும் வந்தார்கள்.



* டி.எம்.கிருஷ்ணாவுக்கு பகவான் சத்ய சாய்பாபா மோதிரம் அளித்து ஆசி...

காலை 7 மணிக்கு தரிசனம். ஆயிரக் கணக்கானவர்கள் அங்கே இருந்தார்கள். நாங்கள் கொஞ்சம் தள்ளி இருந்து பார்க்க முடிந்தது. அப்போது "மாலை நான்கு மணிக்கு உங்கள் கச்சேரி. தயாராய் இருங்கள்" என்றார்கள்.

**நா**ன் பாடிய மேடை கொஞ்சம் வித்தியாசமானது. பாபா உட்கார்ந்திருக்கும் இடத்திலிருந்து பார்த்தால், 'போர்ட்டிகோ', புல்வெளி எல்லாம் தெரியும்.

எங்கள் ஒவ்வொருவர் கையிலும் ஒரு ரோஜாப் பூ கொடுத்திருந் தார்கள். அதை அவருக்குக் கொடுத்து விட்டு வணக்கம் தெரிவிக்க வேண்டும்; அதுதான் அங்கு வழக்கம்.

அந்தச் சம்பிரதாயம் முடிந்து, 'நாத தனுமனிசம்' பாடிவிட்டு, 'அப்பராம பக்தி' பாட ஆரம்பித்தேன். அதில் 'கபி வாரிதி

தாடுநா' (குரங்குகள் ஆழ்கடலைத் தாண்ட முடியுமா?) என்ற வரியைத்தான் நிரவல் செய்தேன். பாபா அப்போது மெதுவாகச் சிரித்துக்கொண்டார்.

தொடர்ந்து பஜகோவிந்தம், பிபரே ராமரசம், ஒரு சாய்பஜன், சர்வம் பிரும்ம மயம் என்று ஒவ்வொன்றாகப் பாடிக் கொண்டிருந்தேன். நான் பாடும்போது, பெரும்பாலும் கண்களை மூடிக்கொண்டு விடுவேன். அவர் சற்று நகர்ந்துபோய் வெளியே அமர்ந்து கொண்டிருந்தார். நான் கண்களைத் திறந்தபோதுதான் கவனித் தேன். அவர் அருகே இருந்த அறைக்குள் போனார். அங்கே ஷீரடி சாய்பாபாவின் சிலை இருந்தது. அங்கிருந்து வந்து மறுபடி 'போர்ட்டிகோ' போன்ற வாசலில் அப் படியே உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந் தார். 40 - 45 நிமிடம் பாட வேண்டும் என்றுதான் சொல்லியிருந்தார்கள். பார்த் தால் 70 நிமிடத்துக்கு மேல் ஆகிவிட்டது. யாரும் நிறுத்தவும் சொல்லவில்லை.

'மாமவ பட்டாபிராம்' பாட ஆரம்பித் தேன். திரும்ப வந்து பழையபடி எங்கள் அருகேயே அமர்ந்து கேட்க ஆரம்பித்தார். அதிக நேரம் பாடிவிட்டதாக நினைத்து முடித்துக்கொண்டேன். "ஏன் சரணம் பாடவில்லை? மறந்து போச்சா?" என்று புன்னகைத்தபடியே கேட்டார் பாபா. கிட்டே வருமாறு சைகை செய்தார். அருகே போனேன். நாற்காலி முனையில் வைத் திருந்த வலது கையால் வட்டம் போடுவது போல் செய்தார். நமஸ்காரம் செய்யணும் என்று நான் நினைத்து, குனிந்து வணங்கி எழுந்தேன். வலது கையை நீட்டச் சொல்லி, ஓம் என்று பொறித்த தங்க மோதிரத்தை அணிவித்தார். என் விரல்கள் சற்றுப் பருமன். ஆனால், அளவு எடுத்துச் செய்தது மாதிரி அழகாகப் பொருந்தியது!



"எங்கே இருக்கிறாய்?" என்று விசாரித் தார். "எல்லோரும் சென்னையிலிருந்து தான் வருகிறோம்" என்றேன். சிஷ்யன் ரவிகிரணைப் பார்த்துத் தமிழில், "நீ... எங்கேயிருந்து?" என்று கேட்டார். சொன் னேன். பிறகு அவனிடம், "இவரிடம் நீ நன்றாகப் பாட்டுக் கற்றுக்கொள்!" என்றார். பிறகு என்னிடம், "தெலுங்கு வார்த்தைகளில் கொஞ்சம் கவனம் வைத் துக்கொள்!" என்றார்.

கன்னத்தில் மெதுவாகத் தட்டி, பிறகு முதுகிலும் தட்டிக்கொடுத்துவிட்டு, "உன் பெயர் உண்மையிலேயே கிருஷ்ணா தானா?" என்று விசாரித்தார். "இல்லை சுவாமி என் பெயர் ஸ்ரீகிருஷ்ணன். ஆனால், இப்போது கிருஷ்ணா என்று ஆகிவிட்டது!" என்றேன்.

"ஆமாம். ஸ்ரீ என்பது ஒரு டைட்டில் மாதிரிதானே இருக்கிறது? கிருஷ்ணா... கிருஷ்ணா ப்ளூ...!" என்றார். சொன்னவர், மறுபடி கையை வட்டமாகச் சுற்றி, பச்சைக்கல் வைத்த மோதி ரத்தை வரவழைத்து, இடது கையை நீட்டச் சொல்லி, அவரே அணிவித்தார். அதுவும் மிகச் சரியாகவே பொருந்தியது!

"எப்போ திரும்பவும் வருவே?" என்றார் மிருதுவாக.

"நீங்கள் எப்போது சொல் கிறீர்களோ அப்போது வரு கிறேன் சுவாமி!" என்றேன்.

"இது உன் வீடு. எப்போ வேண்டுமானாலும் நீ வரலாம்" என்றார் அன்போடு.

வயலின் கலைஞர் ஸ்ரீராம்குமாரை அழைத்தார். "நான் எம்.எஸ். அம்மாவோடு மூணு நாலு தடவை வந்திருக்கிறேன்" சுவாமி என்றார் ஸ்ரீராம்குமார். "அப் படியா? எம்.எஸ்.ஸோடு வந்திருக்

கிறாயா?'' என்று கேட்டார், வலது கையைச் சுழற்றினார் (சுழற்றுவது என்றால், விரல்களை மட்டும்தான் சுற்றுகிறார்). மோதிரம் வந்தது. அதை அவருக்கு அணிவித்தார்.

மனோஜ் சிவா அருகே போனதும், ''என் குருநாதருக்கும், என் தகப்பனாருக்கும் உடல்நிலை சரியில்லை. அவர்கள் சீக்கிரம் குணம் அடைய வேண்டும்!'' என்று வேண்டிக் கொண்டார். உடனே பாபா அவர் நெஞ்சில் கைவைத்து, ''எல்லாம் சரியாகி விடும். கவலைப்படாதே!'' என்று ஆசி கூறினார்.

இத்தனை நிகழ்ச்சிகளையும் முப்பதாயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். முதல் வரிசையில் மல்லிகா சீனிவாசன் இருந்தார். பிரபல இந்துஸ்தானி இசைப் பாடகி பர்வீன் சுல்தானா கடைசி வரை இருந்தார்.

பாபா வெகுச்சாதாரணமாக, கேஷுவலாக இருந்தார். எந்தவிதத் தோரணையும் இல்லாமல், ஒரு நண்பர்போல நடந்து கொண்டார். அதுதான் ஆச்சரியமாக இருந்தது. நடப்பது எல்லாமே ரொம்ப இயற்கையாக, எந்தவித மிகையும் இல்லாமல் இருந்தது.

அங்கேயிருந்த பல இளைஞர்களைக் கூப்பிட்டு, ''இவன் இங்கே இசை கற்றுக் கொள்கிறான்; நன்றாகப் பாடுவான்'' என்றார். அவனைப் பாடச் சொன்னார். பி.லீலாவின் மகன் அங்கே படிக்கிறார். ''இவனும் நன்றாகப் பாடுவான்'' என்று அவரையும் பாடச் சொன்னார். அடுத்ததாக வேறொரு பையனைக் கூப்பிட்டுப் பாடச் சொன்னார். ஏதோ தங்கள் வீட்டுக் குழந்தைகளை அறிமுகப்படுத்திப் பெருமை கொள்ளும் பெரியவர் போல, அவருக்கு அப்படி ஓர் ஆனந்தம்.

போட்டோவுக்கு ஏற்பாடு செய்து விட்டு, படங்கள் எல்லாம் எடுத்துக் கொண்ட பிறகு, திரும்பவும் எங்களுடன் வந்து அமர்ந்துகொண்டார். சிஷ்யன் ரவிகிரணைச் சுட்டிக் காட்டி, 'யக்ஞோபவீதம்...செயின்' என்றார். முதலில் எங்களுக்கு எதுவும் புரியவில்லை. அவன் ஜிப்பாவின் மேல் பட்டன் போடாமல் இருந்ததால், பூணூல் கழுத்து செயினுடன்



**“இது உன் வீடு. எப்போது வேண்டுமானாலும் நீ வரலாம்”**

**என்றார் பகவான் சத்ய சாய்பாபா**

சிக்கிக்கொண்டு அறுந்துவிடும் நிலையில் இருந்ததைத்தான் அவர் சுட்டிக்காட்டினார்!

ஹாஸ்டல் வார்டனைக் கூப்பிட்டு, ''டின்னர் எத்தனை மணிக்கு?'' என்று கேட்டார். அவர் ''ஏழரை மணிக்கு'' என்றதும், ''ஏழே கால் ஆகிவிட்டது போய்ச் சாப்பிடுங்கள்'' என்றார். நேரக் கட்டுப்பாட்டில் அவர் ஸ்ட்ரிக்ட் என்று எல்லோருக்கும் தெரியும்.

எனக்கு வியப்பாக இருந்தது. நாங்கள் போகிறவரை, கண் எடுக்காமல் பார்த்துக் கொண்டே இருந்தார்.

''இது மாதிரி இதுவரை நடந்ததே இல்லை'' என்று அங்கே பலரும் பிறகு சொன்னார்கள். அவரை மிகச் சிறிய வயதில், சென்னை 'சுந்தரம்' வளாகத்தில் வாசலில், மிகத் தள்ளி நின்றுகொண்டு பார்த்திருக்கிறேன். இத்தனை வருடங்களுக்கு அப்புறம் இப்போதுதான் அவரை இத்தனை அருகில் பார்க்கிறேன்'' - நெகிழ்ச்சியோடு முடித்தார் டி.எம். கிருஷ்ணா.

– சாருகேசி




எஸ்.பி.முத்துராமன்

"இந்தப் படத்தில் நீங்கள் சாந்த சொரூபியான மகான் ராகவேந்திரர். உங்களுடைய வழக்கமான வேகத்தையெல்லாம் விட்டுவிட்டு, அமைதியே உருவான மகானாக வாழ வேண்டும்" என்று ரஜினியிடம் கூறினேன். நான் சொன்னதைக் கண்களை மூடி, அமைதியாக உள்வாங்கிக் கொண்டார்; உள்வாங்கிக் கொண்டதை ஒவ்வொரு காட்சியிலும் பிரதிபலித்தார்.

படத்தில் சிறு தவறுகூட வந்துவிடக்கூடாது என்பதற்காக, சென்னை திருவல்லிக் கேணியில் இருக்கும் ஸ்ரீ ராகவேந்திரர் மடத்தைச் சேர்ந்தவர்கள் நான்கைந்து பேர்களைப் படப்பிடிப்பின்போது கூடவே வைத்துக் கொண்டு, அவர்களின் வழி காட்டுதலின்படி காட்சிகளை உணர்ச்சிபூர்வமாக எடுத்தோம். குறிப்பாக மகான் ஸ்ரீ ராகவேந்திரர் ஜீவசமாதி அடையும் காட்சியை எடுத்தபோது, படப்பிடிப்பில் கூடியிருந்த நூற்றுக்கணக்கானவர்களும் உணர்ச்சிவசப் பட்டுக் கண்கலங்கிவிட்டார்கள். மகானுக்கு 'கர்நாடக மாநிலத்திலும் இலட்சக்கணக்கான பக்தர்கள் இருக்கிறார்கள். அவரைப் பற்றி அறியாதவர்களும், அவருடைய அற்புதமான வாழ்க்கையைப் பற்றித் தெரிந்துகொள்ளும்படியாக நீங்கள் படம் எடுத்துவிட்டீர்கள்' என்று பலரும் என்னைப் பாராட்டினார்கள்.

இப்போதுகூட, மந்திராலயத்தில் உள்ள மடத்தில் முக்கிய விசேஷங்களின்போது, பக்தர்களுக்கு அந்தத் திரைப்படத்தைத் திரையிடுவது வழக்கமாக இருக்கிறது. உலகமெங்கும் வாழக்கூடிய ஸ்ரீ ராகவேந்திரரை வழிபடும் 'மாத்வர்கள்' அந்தப் படத்தின் வி.சி.டி. அல்லது சி.டி.யைப் போட்டு, அவ்வப்போது அந்த மகானின் சரித்திரத்தைத் திரையில் பார்த்து மகிழ்கிறார்கள். திருவல்லிக்கேணி ஸ்ரீ ராகவேந்திரர் மடத்திலிருந்து, ஆண்டுதோறும் எனக்குப் பிரசாதம் அனுப்பி வைக்கிறார்கள். அதை நான் மிகப் பெரிய கௌரவமாகக் கருதுகிறேன்.

# கட்டபொம்மனுக்கு சிவாஜி;



ரஜினி ரசிகர்கள் முத்தியில் ஒரு

கலப்படமான வரவேற்பு இருந்தது. படத்தில், ரஜினியின் வழக்கமான அதிரடி ஆக்ஷன் இல்லை என்ற ஏமாற்றம் இருந்தது என்றாலும், தங்கள் 'தலைவர்' சவாலானக் கதாபாத்திரத்தை ஏற்று, மாறுபட்ட நடிப்பை வழங்கி இருக்கிறார் என்று வியந்தார்கள்.

அந்தப் படத்தில், ஒரு முஸ்லிம்

# ஸ்ரீ ராகவேந்திரருக்கு ரஜினி!

மன்னர், ஸ்ரீ ராகவேந்திரரைச் சோதித்துப் பார்ப்பதுபோல ஒரு காட்சி இடம்பெற்றிருக்கும். அவர் ஒரு தட்டில் மாமிசத்தை வைத்து மூடி, பூ என்று ஸ்ரீ ராகவேந்திரரிடம் அளிக்க, அதனைத் திறந்து பார்க்கிறபோது, அது பூவாகவே மாறி இருக்கும். அதன் தொடர்ச்சியாக ஒரு சம்பவத்தை என்னால் மறக்கவே முடியாது.

**ப**டம் வர்த்தகரீதியில் வெற்றி பெறவேண்டும் என்ற நோக்கத்தில், நான் ஒரு காரியம் செய்தேன். ஸ்ரீ ராகவேந்திரரைப் பரிசோதித்துப் பார்க்கும் முஸ்லிம் மன்னர் ஒரு பாடல் காட்சியின் மூலமாக அறிமுகமாவதாகக் காட்சியினை அமைத்திருந்தேன். அதற்காக முஸ்லிம் மன்னராக நடித்த, டான்ஸ் ஆடிப் பழக்கமில்லாத சத்யராஜுக்கு டான்ஸ் மாஸ்டர் புலியூர் சரோஜா மூலமாகக் கடுமையாகப்



# ஹேப்பி பர்த்டே ஸ்பெஷல்!



**இந்த வாரம் ரசிகர்மன்ற ராஜாக்களுக்குத் தடா. ரஜினியின் பிறந்த நாள் ஸ்பெஷல் என்பதால் இந்த பாக்ஸ் மேட்டரையும் நானே குத்தகைக்கு எடுத்துள்ளேன்.**

**- எஸ்.பி.எம்.**

'புவனகிரி'யில் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளுக்கு ஒரு
கோயில் கட்ட வேண்டும் என்று அதற்கான பணிகளில்
ஈடுபட்டார் முன்னாள் தமிழக அமைச்சர் சுவாமிநாதன்.
கோயில் அடிக்கல் நாட்டு விழாவுக்கு ரஜினி கட்டாயமாய்
வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டதன்பேரில் ரஜினி,
ஆர்.எம்.வி. ஆகியவர்களுடன் நானும் சென்றிருந்தேன்.
ஆற்றின் ஓரமாய் இருந்த அப்பகுதியில் மக்கள் வெள்ளம்.
ரஜினி, ஸ்ரீ ராகவேந்திரரைப் பற்றி உருக்கமாய்ப் பேச,
அனைவரும் மெய்மறந்தனர். விழா சிறப்பாக நடந்து முடிந்
தது.

ஸ்ரீ ராகவேந்திரர் கோயில் கட்டிமுடிக்கப்பட்டு கும்பாபி
ஷேகத்துக்கு மறுபடியும் ரஜினியை அழைத்தார்கள்.
ஆனால், ரஜினி வர மறுத்துவிட்டார். அவர், அதற்குக் கூறிய
காரணம் என்ன தெரியுமா?

''முன்பு அங்கே ஸ்ரீ ராகவேந்திரர் இல்லை. நான் வந்து
கலந்துகொண்டேன். இப்போது அங்கே தெய்வமாக அவர்
இருக்கிறபோது, நான் அங்கு விழாவுக்கு வந்தால் மக்களின்
கவனம் என்னை நோக்கிச் சிதறும். அது சரியில்லை'' என்றார்.

இன்று உலகளாவிய புகழ்பெற்றுள்ள சூப்பர் ஸ்டார், எந்தப்
பெருமைக்கும் தான் காரணம் என்று கூறிக் கொள்வதில்லை.
'இறைவனின் அருள்!' என்கிறார். தன்னுடன் பணியாற்றிய
மற்றவர்களுடைய உழைப்புதான் என் வெற்றிக்கு வித்திட்டது
என்கிறார்.

சூப்பர் ஸ்டாருடைய பிறந்த நாளைக் கொண்டாடும்
தருணத்தில், 'வெற்றியின் பாதிப்பு தலைக்குச் செல்லாமல்,
அதற்குக் காரணம் இறைவன் என்று சொல்லும் பணிவை'
அனைவரும் கடைபிடித்து வாழ வேண்டும் என்பதே
எனது விருப்பமாகத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பயிற்சியளித்து, ஒரு மும்பை அழகியுடனான நடனக் காட்சியைப் படம்பிடித்து படத்தில் இணைத்திருந்தேன். படத்தின் முதல் பிரதி ரெடியானதும், தயாரிப்பாளர் என்ற முறையில் டைரக்டர் பாலசந்தரையும் மற்றும் குறிப்பிட்ட சிலரையும் மட்டும் அழைத்து, படத்தைத் திரையிட்டுக் காட்டினேன். படம் முடிந்ததும், பாலசந்தர் என் கைகளைக் குலுக்கிப் பாராட்டினார். நான் ஏற்றுக்கொண்ட மிகப்பெரிய சவாலான பணியை, நல்லபடியாக முடித்துவிட்ட திருப்தி எனக்குள் ஏற்பட்டது.

அடுத்த நிமிடம் பாலசந்தர், ''முத்துராமன், ஒரு முக்கியமான விஷயம். ஆன்மிக மணம் கமழும் இந்த நல்ல படத்தில் எதற்காக அந்தக் கவர்ச்சிகரமான டான்ஸ்? இனிமேல் படம் பார்க்கிற யார் கண்ணிலும் அந்தப் பாடல் காட்சி படக் கூடாது! உடனடியாக அந்தப் பாடல் காட்சியை வெட்டி எடுத்துவிடுங்கள்!'' என்றார். நானும் அப்படியே செய்தேன்.

சில நாட்களுக்குப் பிறகு, படம் பார்த்த சத்யராஜுக்கு அதிர்ச்சி! ''என்ன

சார்! டான்ஸ் ஆடத் தெரியாத என்னைப் பெண்டு நிமித்தி டான்ஸ் ஆட வெச்சிட்டு, இப்போ பார்த்தா அந்த டான்ஸ் சீனையே காணோமே!'' என்று அவர் கேட்டபோது, கவர்ச்சி நடனத்துக்குக் கத்தரிபோட்ட பின்னணியை விளக்கிச் சொல்லி, ''இந்த ஒரு பாட்டு இல்லாது போனால் என்ன, எதிர்காலத்தில் உங்களுக்கு நிறைய பாடல் காட்சிகளில் டான்ஸ் ஆட வாய்ப்புக் கிடைக்கும்'' என்று அவரைச் சமாதானப்படுத்தினேன். இன்று படங்களில் டான்ஸ் காட்சிகளில் கலக்குகிறார் சத்யராஜ்!

சிவன், பார்வதி, லட்சுமி, சரஸ்வதி போன்ற கடவுள்களெல்லாம் எப்படி இருப்பார்கள் என்று நமக்குத் தெரியாது. ஓவியர் ரவி வர்மாவின் ஓவியங்கள் மூலமாகத்தான் நாங்கள் அவர்களை உருவகப்படுத்திக் கொண்டிருக்கிறோம்; வீரபாண்டிய கட்டபொம்மன், பாரதியார், வ.உ.சி. போன்றவர்களை எல்லாம் நாம் நேரில் பார்த்ததில்லை. இப்போது அவர்கள் எல்லாம் எப்படி இருப்பார்கள் என்று நினைத்தால், உடனே நம் கண் முன் தோன்றுவது நடிகர் திலகம் சிவாஜியின் உருவம்தான். அதேபோல, ஸ்ரீ ராகவேந்திரராக தனது உள்ளார்ந்த பக்தியின் வெளிப்பாடாகத் திரையில் தோன்றி, நிரந்தரமாக நம் அனைவரது நெஞ்சிலும் ஒரு இடம்பிடித்துவிட்டார் ரஜினி.

ரஜினி ஒரு திறமைமிக்க நடிகர். விளக்கும் அவர்தான்; திரியும் அவர்தான்; எண்ணெயும் அவர்தான்; தீபமும் அவர்தான். நான் அந்த விளக்கின் ஒளியைச் சற்றே கூட்டவோ, குறைக்கவோ செய்யும் சிறுகுச்சிதான். எனவே, அனைத்துப் பெருமையும் புகழும் ரஜினிக்கே!

**(பயணம் தொடரும்)**



# வேல்

இரட்டைக் குழந்தைகள் பிரிந்து, இடைவேளையில் சேர்ந்து, க்ளைமாக்ஸில் பெற்ற, வளர்த்த குடும்பங்களிடமே தஞ்சமடையும் ராஜா காலத்துக் கதை. ஆனால், தமது விறுவிறு மொறுமொறு திரைக்கதையால் அனைத்தையும் மறக்கச் செய்து சுறுசுறுப்பாகத் தந்திருக்கிறார் இயக்குநர் ஹரி.

இரட்டை வேடங்களில் சூர்யா. கிராமத்துக் காளையாக வலம் வந்து எதிரிகளைத் துவம்சம் செய்யும் வேலாகவும், வசீகரிக்கும் மனசுடன் டிடெக்டிவாக தூள் கிளம்பும் நகரத்து வாசுவாகவும் ரவுண்டு கட்டி அடிக்கிறார். பெற்ற குடும்பத்துக்கும் வளர்த்த குடும்பத்துக்கும் இடையில் சிக்கிக் கொண்டு, பாசத்துக்காக மருகும் போது நம்மையும் பரிதவிக்க வைக்கிறார். அசின் அழகான காதல் பொக்கே. சூர்யாதான் தனக்குப் பார்த்த மாப்பிள்ளை என்பது தெரியாமல், அவரிடமே அவரை வேவு பார்க்கச் சொல்வது கலகல ரகம். வேண்டுமென்றே சூர்யா அவரைத் தவிர்ப்பதும், அதனால் தவிப்பதும் சுகமான சோக கீதம்.

பேரனை இழக்கத் தயாராக இல்லாத லட்சுமியும் மகனை தொலைத்துவிட்டுத் தவிக்கும் சரண்யாவும் சென்டிமெண்ட் பட்டாசுகள். வைகைப் புயல் வடிவேலு தௌசன் வாலா. காகம் எச்சமிடும் காமெடி அட்ராசக்கை. கொஞ்ச நேரமே வந்தாலும் நாசர் நாசர்தான்.

வயல், வயல்சார்ந்த கிராமங்களை கண்களுக்குத் தின்னக் கொடுத்து கச்சிதமாய் மனத்தில் இடம் பிடித்து விடுகிறார் ஒளிப்பதிவாளர் ப்ரியன். யுவன்சங்கர் ராஜாவிடம் இன்னும் எதிர்பார்த்தோம் என்பதை மறுப்பதற்கில்லை. அரிவாள், வெட்டுக் குத்தி, அம்மா-மகன் சென்டிமெண்ட் என்று அரைத்த மாவையே அரைத்திருந்தாலும், நயமாக, இதமாக, பதமாகவே அரைத்திருக்கிறார் ஹரி. சஸ்பென்ஸ் என்று நாம் நினைக்கும் போதே அவற்றை உடைப்பதும், துணிந்து இரண்டாவது சூர்யாவுக்கு ஜோடியில்லாமல் செய்ததும், பாசப் போராட்டத்தையே க்ளைமாக்ஸாக படரச் செய்திருப்பதும் படத்தின் ஆகப் பெரிய வித்தியாசங்கள். இரண்டாவது பாதியைவிட முதல் பாதியில் ரசனையும் வேகமும் அதிகம். 'ஆயிரம் அரிவாளால் சாதிக்க முடியாததை ஆறறிவால் சாதிக்கலாம்' என்று சூர்யா சொன்னாலும், கடைசியில் வில்லனை அரிவாள்தான் முடித்து வைக்கிறது. படம் நெடுக சலிப்பேற்படுத்தும் அளவுக்கு பலரும் பேசிக்கொண்டே இருப்பதைத் தவிர்த்திருக்கலாம்.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் **பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர்** ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/ வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

# ஸ்ரீ லலிதா
## இரண்டாம் பாகம்

சுதா சேஷய்யன்

பொதுவாக, விஞ்ஞான அணுகுமுறையை மேற்கொள்ளும்போது ஒரு விஸ்தீரணம் என்று (மிகச் சிறியது முதல் மிக உயரியது வரை) அனைத்தையும் ஆராய்ச்சிக்கு உட்படுத்திப் பேசுவதுண்டு. ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமமும் இதையே செய்கிறது. ஒரு 'ரேன்ஞ்'ஐ (range) அப்படியே அதில் போட்டுச்சொல்லப்பட்டிருக்கிறது. இதை உணர்த்தும் 285வது திருநாமம் - ரொம்ப அழகான திருநாமம்:

**ஆ. பிரம்ம கீட ஜனனி.** சதுர்முக பிரம்மன் - சிருஷ்டிகர்த்தா. அவனுக்கு லோக ஜனகன் என்றே பெயர். அவனே உலகத்தின் தந்தை என்று பொருள். 'ஏன் உலகத்துக்கெல்லாம் தந்தை?' என்று கேட்டால், பிரம்மாவிடத்திலிருந்துதான் பிரஜாபதிகள் வந்தார்கள்; ரிஷிகள் வந்தார்கள். பிரம்மாவிடத்திலிருந்துதான் இந்த உலகமே வந்தது; மானுடமே வந்தது. மானுடத்துக்குத் தலைவராக - தந்தையாக இருப்பவர் என்பதால், லோக ஜனகன் என்று பெயர். இந்த உலகத்தையே சிருஷ்டி செய்யக்கூடிய பிரம்மாவை ஒரு முனையிலும், இன்னொரு முனையில் கடைக்கோடி உயிரினமான ஒரு புழு - (கீடம்) வையும் வைத்துப் பார்க்கிறபோது, எலும்பு கூட இல்லாமல் துடித்துக்கொண்டு நெளியும் இந்தப் புழுவையும் சிருஷ்டித்தவள் **அவள்**தான்; பிரம்மாவை சிருஷ்டித்தவளும் **அவள்**தான். அப்படியானால் இந்த இரண்டுக்கும் இடையிலே, அண்ட பிரம்மாண்டத்தில் இருக்கக்கூடிய எல்லாவற்றையும் சகலத்தையும் படைத்தவள் அம்பாள். பிரம்மாவுக்கு என்ன வேண்டுமோ அதைக் கொடுத்தவள் அவள்தான்; புழுவுக்கு என்ன தேவையோ அதையும் கொடுப்பவள் அவள்தான்.

### மனித சிருஷ்டியில்...

கொஞ்சம் யோசித்துப் பார்க்க வேண்டும்... சில விஷயங்களை நாம் செய்துவிடலாம் என்று நினைப்போம். ஒரு நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப்படுகிறது என்று வைத்துக்கொள்வோம் - சென்னை வீனஸ் காலனி, ஆஸ்திக சமாஜத்தில் உபன்யாஸ நிகழ்ச்சி. தொடர்ந்து சரியாக அது நடக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்வது எவ்வளவு கஷ்டம் தெரியுமா? ஏற்பாடுகளுக்குப் பொறுப்பேற்பவர் எத்தனை முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும்! அதற்கு எத்தனை ஃபோன் பண்ண வேண்டும். எல்லா வேலைகளும் சரியாக நடந்தனவா என்று பார்க்கவேண்டும். எல்லோரும் சரியான நேரத்துக்கு வருகிறார்களா என்று பார்க்க வேண்டும். 6.30க்கு ஆரம்பிக்க வேண்டும் என்றால் ஆரம்பிக்க வேண்டும். வரவேண்டிய உபன்யாஸகர் 6.25 வரை வரவில்லையென்றால், எவ்வளவு தவிப்பு இருக்கும் என்பது அந்தப் பொறுப்பில் இருந்து பார்த்தால்தான் தெரியும்.

ஒரு சிறிய விஷயத்தை ஏற்பாடு செய்வதற்கே நமக்கு இந்த மாதிரி சவாலாக இருக்கிறது. பல சமயங்களில் பல தடங்கல்கள் வருகின்றன. எல்லாம் திட்டமிட்டுச் செய்த பிறகும், எல்லாவற்றையும் மீறி ஏதோ ஒன்று மறந்துபோய் விடுபட்டுப் போனது தெரியவரும். 'அடடா! இதை மறந்துவிட்டோமே!' என்போம்.

ஆனால், இந்த உலகத்தில் எத்

# சகல சிருஷ்டிக்கும் காரணி

தனை நட்சத்திரங்கள்! எத்தனை கோள்கள்! அததுவும் அதனதன் இடத்தில் போய்க்கொண்டிருக்கிறது. இயங்கிக்கொண்டிருக்கிறது. எங்கே யாவது 'டிராஃபிக் ஜாம்' வருகிறதா? விபத்து ஏற்படுகிறதா? ஏதேனும் சண்டை சச்சரவு வருகிறதா? நடக்க வேண்டிய விஷயங்கள் நடந்துகொண்டே இருக்கின் றனவே - எப்படி?

நாம் இப்போது கம்ப்யூட்டர் யுகத்தில் இருக்கிறோம். ஒரு புரோகிராம் உருவாக்கி னால், எந்தப் புரோகிராமாக இருந்தாலும் சரி, அதில் அனேகமாக ஒரு பிரச்னை வந்து நிற்கும் - 'பக்' (bug) என்று அதைச் சொல் வோம். கம்ப்யூட்டரால் சிந்திக்க முடியாது. அது ஒரு ஜட இயந்திரம்தான். ஜடமாக அன்றி, சிந்திக்கக்கூடிய கருவியாக அது இருக்குமானால், அது வேறு மாதிரி மாறி விடும். அது சிந்திக்காத ஜடப்பொருளாக இருப்பதே ஒரு விஷயத்துக்கு நல்லது. ஆனால், அது அவ்வாறு இருப்பத னாலேயே பல பிரச்னைகளும் வரும்.

இதன் பயனாக நிகழ்ந்த ஒரு வேடிக்கை - கம்ப்யூட்டர் வந்த புதிதில் நடந்தது இது. எந்த நாட்டில் அது முதன்முதலில் வந்ததோ அதே அமெரிக்க வல்லரசு நாட்டில்தான் நடந்தது - பத்து, பதினைந்து வருடங்களுக்கு முன்:

ஒரு வாடிக்கையாளருக்கு அவருடைய வங்கியிலிருந்து அறிக்கை வந்துகொண்டே யிருந்தது - கையொப்பம் எதுவுமில்லாத அறிக்கை. 'கம்ப்யூட்டர் ஜெனரேடட் டாகு மென்ட். இதற்குக் கையொப்பம் அவசிய மில்லை' என்கிற அடிக்குறிப்பு இத்தகைய அறிக்கைகளிலும் கடிதங்களிலும் இருக் கும். 'நீங்கள் கடன் பாக்கி வைத்துள்ளீர் கள்; உடனே செலுத்தி விடுங்கள்' என்று கூறியது அந்த அறிக்கை. வாடிக்கையாள ருக்கு ஆச்சர்யம். அப்படி எதுவும் பாக்கி வைக்கவில்லை அவர். 'கட்ட வேண்டி யதையெல்லாம் கட்டிவிட்டேன். எப்படி இந்த மாதிரி கடிதம் வரு கிறது?' என்று கடைசியில் ஒரு நாள் வங்கிக்கு நேரிலேயே போய்க் கேட் டார். 'விளக்கம் அளித்த பிறகும் திரும்பத் திரும்ப இதே மாதிரி கடிதம் எனக்கு வருகிறதே?' என்று கேட்டார்.

வங்கி ஊழியர்களும் கம்ப்யூட்டரில் தட்டு தட்டென்று தட்டித் தேடினார்கள். கடனைத் திருப்பிச் செலுத்தியவரோ, செலுத்திய தொகைக்கெல்லாம் ஆதாரம் வைத்திருந்தார்.

கம்ப்யூட்டர் என்ன சொல்லிற்று தெரியுமா? இவர் *0.00* டாலர் கடன் பாக்கி வைத்துள்ளார் என்றது! அதற்குப் புரிந்த கணக்கு அவ்வளவுதான்; அதற்குப் புரிந்த மொழி அவ்வளவுதான்! 'நிலுவைத் தொகை' என்று அதற்குச் சொல்லிவிட் டால், அது ஒன்றுதான் அதற்குப் புரியுமே தவிர கடனைத் திருப்பிச் செலுத்துதல், தீர்த்தல் என்கிற செயல் அதற்குப் புரியாது. இதை மாற்ற என்னென்னவோ செய்து பார்த்தார்கள்; எதுவும் பயன்தரவில்லை.

**புழுவுக்கு வேண்டியதை பிரம்மாவுக்குக் கொடுக்க முடியாது; பிரம்மாவுக்கு வேண்டியதை புழுவுக்குக் கொடுக்க முடியாது!**

கடைசியில் *0.00* டாலருக்கு ஒரு காசோலை எழுதி, அதைக் கணக்கில் செலுத்தி, பதிவு பண்ணியபிறகு அது ஏற்றுக்கொண்டது. கடன் பாக்கி இல்லை என்று அது அறிக்கை அளித்தது! இது நிஜமாகவே நடந்தது; செய்தியாகவும் பேசப்பட்டது.

## தெய்வ சிருஷ்டியில்...

இதற்கு என்ன அர்த்தம்...? மனித னால் உருவாக்கப்பட்ட இயந்திரங்கள் - அவற்றுக்குச் சில திட்டங்களைச் சொல்லிக் கொடுத்தால், அவை அதன்படி இயங் கும். ஆனால், அந்தத் திட்டப்படிதான் இயங்குமே தவிர, யோசித்துப் பார்த்து, 'இது வேண்டிய விஷயமா? வேண் டாத விஷயமா?' என்று முடிவு

செய்யாது. 'தரையைச் சுத்தம் செய்' என்று ஆணை கொடுத்தால், குப்பையை மட்டும் எடுக்காது; ஜமக்காளத்தையும் சேர்த்து அப்புறப் படுத்தி விடும்! எடு என்றால் எடுக்கும்; போடு என்றால் போடும். அவ்வளவுதான். இந்த மாதிரி சுய சிந்தனை ஆற்றல் இல்லாத மனித ஆக்கங்களில் சிக்கல் (bug) வருகிறது. ஆனால், நினைத்துப் பார்க்க வேண்டும்... ஆண்டவனுடைய படைப்பில் இந்தச் சிக்கல் ஒரே ஒரு இடத்தில்தான் உண்டு;



அதுகூட பகவானுடைய தப்பு இல்லை. இந்த 'பக்' எங்கே வருகிறது தெரியுமா...? மனிதனுடைய படைப்பிலே, சிந்திக்க முடியாத இயந்திரங்களில் 'பக்' ஏற்படுகிறது; ஆண்டவனுடைய படைப்பிலோ, சிந்திக்கக்கூடிய இடத்தில் மட்டும்தான் இந்த 'பக்' வருகிறது - மனிதனுடைய சிந்தனையில் மட்டுமே வருகிறது - வேறு எங்கேயும் வராது!

இந்த நினைப்பையும் சிந்தனையையும் மனிதன் விட்டதால், மறந்ததால் வந்த பிரச்னை - குதர்க்கமாக யோசிக்கிற புத்தி. இது மட்டுமே ஆண்டவனுடைய சிருஷ்டியில் வரக்கூடிய 'பக்'. அதுவும் பகவானுடைய தப்பு அல்ல. 'இப்படியெல்லாம் யோசிக்கலாமா? அப்படியெல்லாம் யோசிக்கலாமா?' என்று ஆண்டவன் கொடுத்த ஆற்றலைக் குயுக்தியாகப் பயன்படுத்த ஆரம்பித்ததன் விளைவு.

## கச்சிதமான ஏற்பாடு

**ஆ**னால், வேறு எந்த இடத்திலுமே, சிருஷ்டியில் நடக்கவேண்டிய விஷயங்கள், நடக்கவேண்டிய முறையில், கிரமத்தில் நடந்துகொண்டே இருக்கின்றனவே, இதற்கு யார் ஃப்ளோ சார்ட் (flow chart) போட்டார்கள்? செக் லிஸ்ட் (check list) போட்டார்கள்! எவ்வளவு முன் ஏற்பாடு இருந்தால் இவ்வளவும் நடக்கும்? இது எல்லாவற்றையும் தாண்டி ஏதோ ஒன்று நடத்துகிறதே - அப்படி நடத்தி வைக்கக்கூடியவள் எவ்வாறு நடத்தி வைக்கிறாள்...?

**ஆ பிரம்ம கீட ஜனனி** - புழுவுக்கு வேண்டியது புழுவுக்கு. புழுவுக்கு வேண்டியதை பிரம்மாவுக்குக் கொடுக்க முடியாது. பிரம்மாவுக்கு வேண்டியதைப் புழுவுக்குக் கொடுக்க முடியாது. முதுகெலும்பு உள்ள மனிதனுக்குத் தர வேண்டியதை அவனுக்குத் தரவேண்டும். மனிதனுக்கு இருக்கிற உறுப்பைக் கொண்டுபோய் புழுவுக்கு வைக்க முடியாது; அப்படி வைத்தால் புழுவால் இயங்க முடியாது.

இப்படியே புழுவுக்கு வேண்டியதை புழுவுக்கு, மானுக்கு வேண்டியதை மானுக்கு, மீனுக்கு வேண்டியதை மீனுக்கும், மனிதனுக்கு வேண்டியதை மனிதனுக்கும் கொடுத்து, எதெற்கு என்ன விகிதாசாரத்தில் கொடுக்க வேண்டுமோ அந்தந்த விகிதாசாரத்தில் சரியாகக் கொடுத்து, எல்லாவற்றையும் நடத்தி வைக்கக்கூடியவள் **ஆ பிரம்ம கீட ஜனனி**.

**(வளரும்)**



# பசியைப் போக்கும் பத்து!

● **நீ.முத்துக்குமார், திருச்சி**

***கிரேஸி குத்துச் சண்டை வீரர் மைக் டைசனை கோதாவில் சந்தித்தால்...?***

எதிராளியின் காதைக் கடித்துத் துப்பும் அளவுக்கு மைக் டைசன் மகா வெறியர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். என் செவி அவருக்கு உணவாகாமல் (இதான் செவிக் குணவா...?) இருக்க, போட்டியின் ஆரம்பத்திலேயே கடி ஜோக்ஸ்களை அவர் காதில் போட்டுச் சிரிக்க வைத்து, காதும் காதும் வைத்தாற் போல சண்டையை சமாதானத்தில் முடிக்க முயலுவேன். அதையும் மீறி அவர் மோத வந்தால், 'யப்பா, மைக் டைசரே... நீங்க பாக்ஸிங்ல கில்லாடி.. எனக்குத் தெரிஞ்சது பாக்ஸ் ஆஃபிஸிங்தான். உங்க பேர்ல முன்னாடி இருக்கற 'மைக்'கை என் முன்னாடி வைங்க, குத்துப் பாட்டு எதுனா பாடி உங்களைக் குஷிப் படுத்தறேன். டைசன், இனிமே நீ மை சன்...' என்று கட்டித் தழுவி, டயலாக் பேசி அவரை டயர்டாக்குவேன்.

● **சி. மகேஷ், திருச்சி**

***திருமணங்களில் 'நலங்கு விளையாட்டு' விளையாடப் படுகின்றதே, அது எதற்கு?***

'விளையாட்டு வினையில் முடியும்' என்பதை சிம்பாலிக்காகச் சொல்லவோ என்னவோ... முன்பெல்லாம், பால்ய விவாகம் செய்துகொள்ளும் குழந்தைகளைச் சந்தோஷப் படுத்துவதற்காக, தேங்காயை உருட்டி விளையாடச் சொல்வர். இதுதான் நலங்கு விளையாட்டு. இப்போது திருமணங்களில் ஆகும் செலவைப் பார்த்தால், எனக்கென்னமோ தேங்காய்க்குப் பதில், மணப் பெண்ணின் தகப்பனார் தலைதான்

உருட்டப்படுகிறது என்று தோன்றுகிறது.

● என்.கோமதி, நெல்லை

***கடவுள் உன்னை, 'என்றும் பதினாறு வயது மார்க்கண்டேயனாக இரு' என்று சபித்துவிடுகிறார். பதினாறு வயதாக இருப்பதால் வாழ்நாள் பூராவும் படித்துக் கொண்டே இருக்க வேண்டும். கல்யாணமும் செய்துகொள்ள முடியாது. என்ன செய்வாய் தம்பி?***

'மார்க்'கண்டேயன் என்ற பெயரிலேயே மார்க் இருப்பதால், படிக்கப் பயப்பட மாட்டேன். கல்யாணம் செய்துகொள்ளாமலேயே, கடவுள் கொடுத்த அந்தப் பதினாறைப் பெற்று பெருவாழ்வு வாழ்வேன்.

● ஸ்வேதா, டெல்லி

***பெண்களுக்குக் கற்பு... ஆண்களுக்கு...?***

கற்பைக் காக்கும் பொற்பு; அதாவது பொறுப்பு.

● கிரிதரன், வேலூர்

***சங்கீதம் சம்பந்தமாக ஒரு ஜோக் சொல்லுங்களேன்?***

என் நாடகத்திலிருந்தே சொல்கிறேன்.

**மாது** *(மனைவி ஜானகியைப் பார்த்து):* ஒங்கப்பன் பயங்கரமான கஞ்சன். அவன் ஏன் மோர்சிங் கத்துண்டான்? சின்ன வாத்தியம், வெல குறைச்சல். அல்பி வாங்கிக் கத்துண்டுட்டான்.

**ஜானகி:** ஒங்கப்பா எங்கப்பாவைவிட படுகஞ்சன். அவர் வாய்ப்பாட்டுதானே கத்துண்டார். வாத்தியமே வாங்கலையே!

**மாது:** யார் சொன்னா? எங்கப்பா மிருதங்கம்கூட வாசிப்பார். அவருக்குக் 'கலியுக நந்தி'ன்னு டைட்டிலே கொடுத்திருக்காங்க தெரியுமா?

**ஜானகி:** அது ஒண்ணும் அவர் வாசிப்புக்காகக் கொடுக்கல... அவருக்கு நெத்தியில் அடிபட்டு, ரெண்டு பக்கமும் மாட்டுக் கொம்பு மாதிரி வீங்கியிருக்கும். அதைக் கிண்டல் பண்ணித்தான் 'கலியுக நந்தி'ன்னு கூப்பிடறாங்க.

● ஜி.லட்சுமி வாசுதேவன், வேளச்சேரி

***பசியே எடுக்காமல் இருக்க மாத்திரை, மருந்துகள் ஏதுவும் இருக்கிறதா?***

1. பரமஹம்சரின் உபதேசங்கள் 2. பாரதியாரின் கவிதைகள் 3. கி.வா.ஜ. தமிழ் 4. எம்.எஸ்.சுப்புலக்ஷ்மியின் இசை 5. கல்கி, தேவன் நாவல்கள் 6. ஜெயகாந்தன் சிறுகதைகள் 7. ரவிவர்மா ஓவியங்கள் 8.மணியம், கோபுலு, சில்பி சித்திரங்கள் 9. மேலே கூறிய எட்டை, செவிக்கு உணவாக்கி ஊட்ட என் நண்பன் க.இரவி 10. அடம்பிடிக்காமல் சாப்பிட, அகங்காரம் இல்லாத நான்... இந்த பத்தும் இருந்தால் என் பசி பறந்து போகும்.

● வ.வைகுண்டம், சென்னை

***நாகேஷுக்கும் உங்களுக்கும் ஒரு ஒற்றுமை உண்டு. என்ன கூறுங்கள் பார்க்கலாம்?***

நகைச்சுவையில் நாகேஷ், பிரும்மாண்டமான 'பென்ஹர்' திரைப் படம். நான் அந்தப் படத்துக்காகப் போட்ட தம்மாத்துண்டு 'ட்ரெய்லர்.' இந்த உவமையும் நாகேஷ் சாரின் உபயம்தான். அப்புறம் ட்ரெய்லர்கூட தப்பு. வால் - போஸ்டர் இல்லை, பிட்-நோட்டீஸ் சார். மறந்தும் நாகேஷுக்கும் எவருக்கும் ஒற்றுமை தேட முயலாதீர்கள். அது சரி... நீங்க என்னை வச்சு காமெடி கிமெடி பண்ணலியே!

● ரெஜினா, பெங்களூரு

***தலையெழுத்து... கையெழுத்து... என்ன சம்பந்தம்?***

தலையெழுத்து Nature-மாற்ற முடியாதது. கையெழுத்து Signature-மாற்றக் கூடாதது. ●




செவக்காட்டுச் சித்திரங்கள் யதார்த்த மாக, அதேசமயம் மனதைத் தொடும் அளவுக்கு இருக்கிறது.

- ஆர்.புஷ்பா, சென்னை

'ரயில் விபரீதம்' கவிதை பிரமாதம்.

- பா.அச்சுதன், வயலூர்

அருள்வாக்கு பகுதி மனித ஆத்மா வின் உண்மை தத்துவத்தை நன்கு உணரச் செய்தது. பாராட்டுக்கள்.

- சீதா முருகானந்தம், திருவைகாவூர்

'உள்ளும் புறமும்' சிந்திக்க வைத்தது. அமெரிக்காவின் ஆலோசனை இல்லாமல் முஷாரஃபால் எப்படி எமர்ஜென்ஸியை டிக்ளேர் செய்ய முடிந்தது என்கிற கேள்வி செம குட்டு!

- எஸ்.கே.வாலி, த.முருங்கப்பட்டி

'அஹிம்சா மூர்த்தி அறவழியில் நடத்திய காங்கிரஸில் இன்று அரிவாள் கலாசாரமா? வெட்கம்!

- என்.சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்

மின்னல் கதைகள் அனைத்தும் பளிச்சென்று இதயத்தைக் கவர்ந்தன.

- இந்திரன், நாகர்கோவில்

ஜிம்கள் ஜாக்கிரதையின் ப்ளஸ், மைனஸ் பாயிண்டுகளை அலசியிருந்த விதம், ஜம் என்று இருந்தது.

- சி.மகேஷ், திருச்சி

'பிரச்னை என்பது மாறுவேட மிட்ட வெற்றி, என்ற சேவாலயா முரளிதரனின் வரி சிந்திக்க வைத்தது.

- ஜே.துரைராஜ், சென்னை

அழகு என்பது பார்க்கப்படுபவரின் தோற்றத்தைக் காட்டிலும் பார்ப்பவரின் மனத்தைப் பொறுத்தது என்று தராக அளித்த விளக்கம் அழகோ அழகு!

- வே.ந.கதிர்வேல், வேலூர்

மனக் குதிரையை எப்படிக் கட்டுப் படுத்த வேண்டும் என்பதை இந்த வார ஸ்ரீலலிதாவில் சுதா சேஷய்யன் வெகு தத்ரூபமாக விளக்கியிருந்தார்.

- பி.ஹேமாப்புஜட், சென்னை

## ஸ்பீடு போஸ்ட்!

இல.கணேசன் கூறுவதுபோல் அரசியல் களம் அமைந்துவிட்டால் அது நிச்சயம் நமது நாட்டின் பொற்காலம் என்று கூறலாம்.

- எஸ்.கோபாலன், நங்கநல்லூர்

அபி (தேவயானி)யின் மனம் திறந்த பேட்டியினைப் படித்தேன்.
சீரியஸ் ☐ சிரிப்பு ☐
சுவாரஸ்யம் ☐ கலகலப்பு ☑

- த.சத்தியநாராயணன், அயன்புரம்

# மரம் இயற்கை நமக்களித்த வரம்

அதை பாதுகாப்பது நமது கடமை.
பதிலுக்கு நம் வீட்டு கதவுகளாகவும் ஜன்னல்களாகவும்
நம்மை நீண்டநாள் பாதுகாக்கும்.
மரத்திற்கு உள்ள தேவைக்கேற்ற உறுதி, அழகு, நம்பகத்தன்மை
வேறு எந்த பொருளுக்கும் இல்லை.

## Timber facts...

### IDEAL MOISTURE CONTENT



Timber retains its shape only when its moisture content is between 14 to 18%. Timber, even after 6 months of Air-Drying contains moisture between 30% to 50%. Kiln Seasoning as per IS Code 1141 alone can bring down the moisture to the ideal level.

### TERMITE PROTECTION

While it is common to apply wood preservative oil, maximum durability is achieved under pressure impregnation method by injecting CCB Chemicals as per IS code 401.



## TIMBER IS NO MORE A LUXURY

Treated Rubber Wood is Affordable. It is approved for Door, Window & Cupboards under IS code. 12896

Door is not a product of Mere carpentry. Use the wood only after Treatment & Seasoning. Even for Teakwood seasoning is a MUST. Take care Before you make your doors.

Contact:

**MAYURAM TIMBER**

257 G.S.T. Road, Tambaram,
Chennai 600 045 Phone: 22415297, 22411261

